A. U. M.

# SAVITRI

## NEW DRAMA IN TAMIL


P. S. Subramania Aiyar

1ST GRADE PLEADER, MADURA


*Author of "Gouri", a New Indian Novel in English, "Lila Vati", a New Sanskrit Drama.*


1000 Copies.

Printed at the Vani Vilasam Press, Ry. Stn. [illegible]

1901

# முகவுரை.

இப் பதிவிரதா பாரம்மியம் முக்கியமாய்க் கற்புடைமகளி ராம் சாவித்திரி சரிதத்தை நாடக வாயிலாகக்கூறும். சாவித்திரி சரிதம் பாரதம் வனபருவத்தின் கண்ணே ஆறு அத்தியாயங்களடங்கிய ஓர் உபாக்கியானமாகக் கூறப்பட்டுள்ளது. ஜயந்திரன் என்னும் அசுரன் உத்தமிகளிலுத்தமியாகிய துரோபதையைத் தூக்கிச் சென்றக்கால் அதனை யுணர்ந்த தருமபுத்திரர் ஆற்றொணுத்துயருடன்மிகப்பிரலாபிக்கக்கண்டமார்க்கண்டேய மகாமுனிவர் அவருக்குத் தேறுதலுண்டாகும் வண்ணம் பதிவிரதைகளின் சரித்திரங்களை சொல்லக்கருதி இவ்வுபாக்கியானத்தைக் கூறலுற்றனர். இது காறும் இவ்வுத்தம சரித்திரத்தை எவரும் வடமொழியிலாவது தென் மொழியிலாவது நாடகரூபமாகச் செய்யாதது ஒருபெருங்குறையெனத் தோற்றுகிறது. பெண்கல்வி ஒருவாறு அபிவிர்த்தியாகிவரும் இக்காலத்தில் இவ்வுத்தம சரித்திரம் முக்கியமாய்ப் பெண்பாலார்க்கு மிக்க பயன்படுமெனக்கருதி இதனைத்தென்மொழியில் ஒரு நாடகமாகச் செய்யத்தொடங்கினேன்.

இயல், இசை, நாடகமென்று சொல்லப்பட்ட முத்தமிழும் தமிழ்ப்பாஷையிலிருப்பினும் நாடகத்தமிழ் சம்ஸ்கிருதம்முதலிய பாஷைகளில் நினைக்கப்பட்டு வருவதுபோல் அவ்வளவு உயர்வாகத் தமிழில் நினைக்கப்பட்டு வந்ததாகத் தோற்றவில்லை. குணநூல், செயிற்றியமென்னும் இலக்கணங்கள் நாடகத்தமிழுக்கென்றே ஏற்பட்டவையாயினும், இலக்கியங்களில் ஒருநாடகத்தையாயினும் காண்பது அரிதினுமரிது. பஞ்சகாவியங்களில் ஒன்றாகிய சிலப்பதிகாரத்துள் நாடகத்தமிழ் சிறிது விரவி வந்திருக்கின்றதை எவருமறிவர். இராமநாடகம், அரிச்சந்திரநாடகம், மார்க்கண்டேயர் நாடகம், இவை மேற்கூறிய இலக்கணங்களாற் கருதிய நாடகமாகா.

ஆங்கிலேய நாடகங்களை யநுசரித்துத் தற்கால விற்பனர்களிற் சிலர் சிலநாடகங்களைத் தமிழில் இயற்றியிருக்கின்ற

னர். ஆங்கிலேயத்துக்கும் தமிழுக்கு முள்ள பொருத்தத்திலும் சமஸ்கிருதத்துக்கும் தமிழுக்கு முள்ள பொருத்தம் விசேஷ முடைத்தாதலால் சமஸ்கிருத நாடகங்களை யநுசரித்தே இதை எழுதலானேன். இதில் எழு அங்கங்களுள்ளன. இவைகளில் 23 வெண்பாக்களும் 10 கலித்துறைகளும் 69 விருத்தங்களும் ஆக 102 செய்யுள்கள் ஆங்காங்கு விரவிக்கிடக்கின்றன. அவைகளிற் சில சீர், தளைமுதலியவை முறைபிறழ்ந்து அச்சிடப்பட்டிருக்கின்றதை நோக்க மிக்கமனவருத்த முண்டாகின்றது. இதனை வேற்றூரில் அச்சியற்ற நேரிட்டதாலும், கடைசி புரூபைப் பார்க்க சமயம் வாய்க்காமற்போனதினாலும் இக்குறை நேரிட்டது. பெரியோர் இப்பிழை பொறுப்பாராக.

உலகமுவக்கும் நம் நாட்டிக்கற்பு நிலைமையை நம் பெண்கள் பூஷணமாகக் கொண்டு அதனினும் சிறிதும் வழுவாமல் பிறந்த குலத்துக்கும் புகுந்த குலத்துக்கும் புகழுண்டாம் வண்ணம் நடப்பதற்கு இச்சிறுநூல் சிறிது உதவிபுரியுமானல் அதுவே யான் அடையும் பெரும் பேறாகும். எல்லாம் வல்ல உமாபதி நமக்கு என்றும் அருள்புரிவாராக.

| | |
|---|---|
| மதுரை<br>நவம்பர் 1900 | இங்ஙனம்<br>பி. எஸ். சுப்பிரமணிய ஐயர். |

## சிறப்புப்பாயிரம்.

இவைமதுரை சேதுபதி ஹைஸ்கூல் உபாத்தியாயர்
மகா-ா-ா-ஸ்ரீ சாமிநாதையர் அவர்களாலியற்றப்பட்டன.

### அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

றைமொழி மாந்தர் போற்றும் சீர்மையான் நேச நன்பன்
றைமொழி யாதந்தி ரேயன் மரபினி லுதித்த மாண்போன்
றைவிலாத் தேவ பாடை குறுமுனி வகுத்த பாடை
றையுட னாங்கி லேயம் மூன்றுமே கற்ற சான்றோன்.

ன்னெறி மனமுங் கைபோம் வழியினிற் களித்துச் செல்லப்
ன் னுடை யாழும் பண்பாய்ப் பரிவுடன் பயிலடா வல்லோன்
ண் ணுடனே னை நாலுமெழில்பெற வினிது கற்றோன்
ன்னினின் மாநதர் தம்முள் மணியென விளங்கும் வள்ளல்.

ருதுகாற் குளம்பா லெற்றி யிறைக்குவெண் சங்க முத்தந்
நதுவா ரின்றிச் செந்நெற் கழனியி லொளிசெய் காட்சி
ரகந்சூழ் மதுரை சார்ந்த வளந்தரு பழங்கா னூரன்
ருதிநேர் தந்தை பேர்கொள் சுப்பிர மணிய சன்மா.

ன்னவ னணிசேர் சொல்லா லரியநூல் பலவி யற்றித்
தன்னவ னாட்டி னுக்கோர் திலகமாய் விளங்கி நிற்போன்
ன்னறும் பாலுந் தேனுங் கண்டருஞ் சுவையுஞ் சேர்ந்த
பான்னனை தெரிந்து சொல்ல வல்லனோ யானு மம்மா.

ண்ணிய கலியி லையா யிரந்தனிற் கற்பு மேன்மை
ண்ணிய புகழ்ச்சா வித்திரி நற்கதை யங்க மேழாய்
ண்ணிஞ் டகம தாக மாண்புசேர் தமிழி னாலே
ண்ணிய வறிவா லாய்ந்தே நூல்வலோ





அம்பிகை துணை.

# பதிவிரதபாரம்மியம்.



## வெண்பா.

சீராம் பொருள்கல்வி தெள்ளறிவு மெய்ஞ்ஞானம்
சோராத மெய்வலிமை தூயதவம்—பாரதனில்
நம்புவார்க் கென்றும் நயந்தநற் புகழொற்றைக்
கொம்பனாள் றாளின் குணம்.

## விருத்தம்.

தந்தைதா யில்லானைத் துணையில்லானைத்
தங்குமிடமற்றானைத் தனியோன்றன்னை
அந்தமிலானைத் திசையம்பரனைத் தான்கூத்
தாடியை மற்றோர்மாதை யணைகுவோனைச்
சிந்தையொடு தேடிமணந் துலகமீன்ற
செல்விகுண வதியுமையைச் சிறந்தென்றேனும்
பந்தமொடு காந்தனுடற் பிரியாநின்ற
பதிவிரதை கண்மணியைப் பகர்வாமென்றும்.

(நாந்திக்குப்பின் சூத்திரதாரன் தோன்றல்).

சபையை நோக்கி வந்தனம் செய்து

## வெண்பா.

கற்றவர்கள் மெய்ப்பொருளைக் கண்டோர்கள் நல்லிசையைப்
பெற்றவர்கள் நாவலிமைப் பேறுளார் — மற்றுமுயர்
அன்பர்கள் கூடு மரங்கமே தண்டமுனக்
கின்பமுட னிட்டே னிதோ.

சபையைப் பார்த்து ஆச்சரியம் அபிநயித்து.

இச்சபையினிடத்துக் கடல்போலு மளவிறந்த கல்வித் திறமையும், விநயம், பொறுமை, பிழையகற்றல், குணமகொ

ளல், முதலிய உயர்ந்த சாதுரியங்களும் இடைவிடாது குடி கொள்ளும் இடமென நீங்கள் பிரகாசிப்பதால் அநேக வாணி கள் ஒரிடத்தில் ஒன்றுசேரும் சிறப்பினும் அதிக மாட்சிமை உண்டாகின்றது. மேலும் நவரசமென்னும் பயோநிதியின் கண் உதித்த எண்ணிறந்த மலர் மங்கைகளின் சங்கமென நீங் கள் விளங்குவதால் நன்றுமெம்போல்வர் வறுமை சிறுமை பெற்றது. பின்னும் நாமென்னும் குன்றளித்த கோடி உமை யவள் கூடும் குழாமென நீங்கள் இங்கு சேர்ந்து விளங்குவ தால் நாம் வேண்டிய எப்பேறும் கைப்பெற்றோம். நாம் புரி யத்தொடங்கும் செயலானது உங்கள் அருளின் பெருமையால் நன்குபெற்று நிறைவேறுமாயினும் பலர்கூடியிழுக்கும் இரதத் தின் முன்னணியில் நிற்கும் துரகங்கள்போல் நாடகமுறையால் ஒரு செயலுமில்லாத யாம் சூத்திரதாரனெனப் பெயர் கொண் டோம்.

(நடியை நோக்கி).

ஓய்! மாரிஷ! சபை மிகவும் நன்றாகக் கூடியிருக்கிறது. நமது நாடகத்தைத் தொடங்குவதற்கு இதுவே சமயம்.

சங்கீதம்.

(விதூஷகன் தோன்றல்).

வெண்பா.

விதூஷகன். மண்ணுண்ட வாய்நான் மறையுண்ட வாய்கவோற்
புண்ணுண்ட வாயாற் பொருளென்றும்—எண்ணிநிதம்
போற்றுவோ மன்பினொடு புன்னகையு நீதிநிறை
மாற்றமுஞ் சேர்மனையார் வாய்.

ஐய! இதென்ன கூட்டம்? என்ன காரணத்தினால் நீர் என்னை இங்கு அழைத்தீர்?

சூத்திரதாரன். நண்ப! நாம் செய்யத் தொடங்கும் கருமத் திற்கு உன்னுதவியை வேண்டுகின்றோம்.

வி. கருமம் உமது தாய்க்கோ தந்தைக்கோ. உமக்கு உதவிசெய்ய நான் புரோகிதன் அல்லவே.

சூ. (சிரித்து)

கருமமென்பதற்கு வினையென்பது பொருள். அது இங்கு நாம் செய்ய முயலும் நாடகத்தைக் குறிக்கின்றது.

வி. நாடகமென்றுலென்ன? நாடு + அகம் = நாட்டக மென்று டகரத்தை இரட்டித்து உரையாமல் நாடகமென்று பிழையாய்ப் பேசும் நீர்தானு சூத்திரதாரர்?

சூ. அப்படியல்ல. நாடகம் என்பது வடமொழி. அது முன் நடந்த செயலை நிகழ்ந்தவாறு புரிந்து காட்டுதலென்று பொருள் படுகின்றது.

வி. இதென்ன! நீர் கூத்தாடிகளின் தலைவரென்று சொல் லுமே. நாடகமென்பது கீழ்மக்கள் பிழைப்புக்காகப் புரியும் ஈனமான தொழில் அல்லவா? அதற்கு இத்தனை பெருமை யென்ன?

சூ. நண்ப! உனது அறிவு மிகவும் புதுமையாயிருக்கின் றது. அப்பியாசம் இல்லாதவர்களுக்குச் சாஸ்திரம் விஷம் என்னும் வசனப்படி கல்லாதவர்களுக்குத்தான் நாடகமென் பது கூத்தாட்டமாகும். நவரசப் பெருக்கினுல் சுரோத்திரம், நயனம் என்னும் புலன்களின் வழி மனதைக் களிப்புற முழுக் காட்டி இதன்றிக் கற்றதனுலாய பயன் என்னவென்று அறி வோர் மேலாகக்கொள்வது நாடகமல்லாது பிறிதுண்டோ? அதேதெனனில்

விருத்தம்.

கதைபுகன் றிடிலோ செவியுணர்ந் திடினும்
கண்ணினுக் கிலைபுலப் படுதல்
இதமொடு விழியுங் கண்ணுறின் மனதுக்
கின்பமே லாகுமென் றெண்ணிப்
பதியினின் முன்னர் நிகழ்முறை ஒருகாற்
பார்க்கவுங் கேட்கவு மினிதாம்
விதமியற் றியுமம் முறைதனக் கறிவோர்
விதித்தனர் நாடக மெனப்பேர்.

## பிரஸ்தாவனை.

வி. நன்றாக இருக்கின்றது. நாடகமென்பது தொன்று தொட்டு மேலாக வழங்கி அலங்கார சாஸ்திரத்துக்கு உரை கல்லாகவும் நுண்ணறிவுக்குப் பெரும்பயனாகவும் இருக்கின்றதா? நமது தொழிலுக்கு இனிய வித்தையை நாம் மேலாகச் சொல்லிக்கொள்வது சாதுரியந்தான். உமக்குச் சூத்திரதாரனென யாது காரணத்தால் பேர் கிடைத்தது?

சூ. கயிற்றினால் பாவைகளை யாட்டிவைப்போனுடைய உவமை பற்றி நாடகசாலையில் காலோசிதப்படி பாத்திரங்களைப் பிரவேசம் செய்து நடிப்பிவிக்கின்ற நமக்குச் சூத்திரதாரனென நூலாசிரியர் பெயர் விதித்தனர்.

வி. நீர் மேலாகப் பாத்திரங்களென்றும் இரசமென்றும் சொன்னீர். அன்னமொன்றுதான் சொல்லப்படவில்லை.

சூ. நண்ப! நீ உணவைத்தவிர மற்றொன்றையும் அறியாதவன்போல் காணப்படுகின்றது. பாத்திரமென்றால் உணவெடுக்கும் கலமல்ல. அது நாடகசாலையில் நிகழ்ந்தவாறு கதையை அனுகரிக்கும் வேஷதாரிகளைக் குறிக்கின்றது. இரசமென்றால் நாம் உணவுடன் அருந்தும் பானமல்ல. ஐம்புலன்களுக்கும் விஷயமான பொருள்களில் குணங்கள் பலவுளவாயினும் அவற்றுள் சாரமானது இதுவென்று கற்றறிந்த மனம் ஆராய்ந்து வியக்கும் அம்சம் இரசம் என்று உரைக்கப்படும். எவ்வாறெனில்.

### விருத்தம்.

கண்ணகன் ஞாலமீதீ கடவுளும் புகலுஞ் சொல்லில்
எண்ணுமார் பொருளுந் தேகத் தினிலுரைந் திடுமோன் மாவுந்
தண்ணரு மலர்கள் மீது தழுவுநன் மணமும் போல
மண்ணினிற் கலைக ளின்கண் மருவிடு மிரச மேலாம்.

வி. ஐய! உம்மால் நன்றாய் உரைக்கப்பட்டது. இரசம் எத்தனை வகைப்படும்.

சூ. அதில் ஒன்பது வகையுண்டு. எல்லாப் பிராணிகளுக்கும் இதமான சிங்காரமும், மனதுக்கு விநோதத்தைச் செய்யும் ஹாஸியமும், அதற்கு எதிரான கருணையும், வியப்பைத்தரும் ரௌத்திரமும், கீர்த்தியைப் பயக்கும் வீரமும், அதிலிருந்து உண்டாகும் பயமும், அதற்குக் காரணமாகிய பீபத்ஸமும், வீரரசத்தின் பலனாகிய அற்புதமும், மோக்ஷத்திற்குக் காரணமாகிய ச்சாந்தமும், ஆக ஒன்பது இரசங்களால் உலகின்கண் எல்லா நூல்களும் விளங்குகின்றன.

வி. நாடகங்களிலெல்லாம் இவ்வொன்பது இரசங்களும் அனுபவிக்கப்படுகின்றனவா ?

சூ. நாடகத்துக்கு அவசியமான ஒன்பது அங்கங்களும் குற்றமின்றிப் பொருந்தியிருக்குமாயின் ஒன்பது இரசங்களும் சற்றேறக்குறைய உதிக்கக்கூடியவைதான்.

வி. அடடா ! மேன்மேலும் வளர்க்கின்றீரே. அவ்வொன்பது அங்கங்களும் யாவை ?

சூ. *நண்ப ! கேள்.

விருத்தம்.

தேடுமுயர் நாடிகையாம் மாதினுக்குச்
சென்னி கதையாம் நடனஞ்சிறந்த கண்கள்
நாடிரவு யௌவனம் பாத்திரங் கண்மேனி
நன்குபுரி சூத்திர தாரனுமே யாவி
பாடுமுயர் நல்லிசையே மகிழுங் கொங்கை
பகருமினி தாமொழிகள் பவளச் செவ்வாய்
கூடுதிரை யேயணியுங் கலையே காமக்
குறியென விதூஷகனைக் கொள்வ ராய்ந்தோர்.

வி. கதையைச் சென்னி என்றீரே. நீர் இப்போது அனுகரணஞ் செய்விக்கும் நாடகத்தின் கதை எச்சிறப்பை யுடையது? அதற்கு எந்நூலில் ஆதாரம்?

சூ. அது உமாதாசனென்னும் ஒருவனால் இயற்றப்பட்ட பதிவிரத பாரம்மியம் என்னும் நாடகம். அது உணர்வோர்க்கு மேற்கூறிய ஒவ்வொரு இரசத்தையும் புகட்டிக் கடைசி இரசத்தின் பலனாகிய மோக்ஷத்துக்குப் பரமசாதனமாய் விளங்கும் மாதர்கற்பையே சிறப்பித்து விளக்கும். அது ஒருவாறு மகாபாரதத்தின் ஆதாரத்தையும் பலவிடங்களில் மதியினால் ஏற்படுத்தப்பட்ட கற்பனைகளையுமுடையது. எவ்வாறெனின், நாடகம் மூவகைப்படும்; முழுமையும் ஒரு ஆதாரத்தை யனுசரித்தால் அதற்குச் 'சுத்தமெ'ன்றும், முழுமையும் கற்பனையாகில் 'கற்பித'மென்றும், அவ்விரு குணங்களும் பொருந்தின் 'மிசிர'மென்றும் பெயர். இந்நாடகம் கடைசியிற் கூறிய வகுப்பைச் சேர்ந்தது.

வி. மெத்த சந்தோஷம்! இனி உமது கதையை வளர்த்த வேண்டாம். நான் இப்போழ்து செய்யவேண்டுவதென்ன?

சூ. நாடகத்துக்குச் சிறந்த அங்கமாகிய நடியை வருவிக்க வேண்டும்.

வி. அவ்வாறே செய்கின்றேன். (மறைதல்)

சங்கீதம்.

[நடிதோன்றல் நடனத்துடன்].

(சூத்திரதாரனைப் பார்த்து).

நடி. ஐய! தங்கள் உத்திரவுப்படி இதோ நான் இங்கு வந்தேன்.

சூ. அளவில்லாக் கலைகள் நிறைந்த அறிஞர் தங்கிய இச்சபையானது உன்னடனத்தைப் பார்த்து மிக்க ஆனந்தமடைந்தது. இரசிகர்களுடைய மனக்களிப்புக்குக் காரணமாகி சகல சராசரங்களையும் அழகு செய்விக்கும் இக்காலத்தை ஓர் பாடலால் நீ வர்ணிப்பாயாக.

ந. விருத்தம்.

தூயநன் மலர்கொய் தங்கசன் பெருகுந்
தூணிமீ திடுமிளங் கிளிகள்

பதிவிரதபாரம்மியம்.

வாய்பயின் றிடுநற் றென்றல்பூங் கொடியை
  மருவியே புரியுநல் லுறவை
ஆயுமா ரிசைகற் குங்குயின் மதுவுண்
  டார்க்குமிவ் வளிகுலம் பிரிவால்
நோயுறும் மடவா ரொடுசமர் புரிய
  நோக்குவன் போற்சிறு வசந்தன்.

சூ. இப்பொழுதுதான் ஆரம்பமாயிருக்கும் வசந்த காலத்தை நன்கு சிறப்பித்து உரைத்தனை. நீ மிகவும் மதியுயர்ந்த பெண் நாயகம் ஆதலால் நீ இசைந்த செய்யுளின்கண் பொருள்படும் விநோதமான சிங்காரத்தினால் இதோ இந்நாடகசாலையில் பிரவேசிக்கப்போகிற சாவித்திரியினுடைய மனோவிருத்தியையும் அம்மாதுக்குறும் விரகமென்னும் தாபத்தையும் நீ சங்கேதமாய் விளக்கிக் காட்டினை. நமது முயற்சி மிகவும் பயன் பெறுவதற்கென்ன தடை?

(எல்லோரும் மறைதல்).

பிரஸ்தாவனை முடிவு.





# 1-வது அங்கம்.



சங்கீதம்.

(சாவித்திரியும் அவள் சகியும் தோன்றல்).

சாவித்திரி. என்னுயிர்போன்ற நீதிமதி!

விருத்தம்.

கங்கைதொட் டினிதாங் குமரிநாட்டளவுங்
கடுகியே நகரமோவ் வொன்றாய்
மங்கையா மேகித் தேடினே னெனதார்
மனதினிக் கிசைமணா வாளன
எங்குமே காணேஞ் செலுமிட மொன்றங்
கேதுவே றிலையெனா உடலைச்
சங்கையில் லாதிப்பொழுதியான் விடுதற்
றகுதியென் றெனதுசிந் தனையே.

சகி! இந்நாள்வரை எங்கும் திரிந்து தேடியும் என் மனதுக்கு இசைந்த கணவன் அகப்படவில்லை. இனியான் என்னுடலை விட்டுவிடுவதே உசிதமென்று நினைக்கிறேன்.

நீதிமதி. (திடுக்கிட்டு) எனது உயிருக்குயிரான சகியே! என்ன கொடுமையான வார்த்தையை நீ சொல்லுகின்றாய்!

விருத்தம்.

மெய்யான கண்ணின் மணியே தவங்கண் மிகநோற்று வாணி [யருளாற்
பொய்யாத வெங்க ளரசன் பயன்ற புதல்விக்கு மீன முறுமேல்
பெய்யாது மேக மினிநீதியேது பிழையென்ப தேதுமதியும்
வெய்யோனு மேது சிறிதேனும் உள்ளம் மெலியா திருந்தி [டுவையே.

என்னறிவிற் கமுதம்போன்ற கிளியே! நான்குவித புருஷார்த்தத்துக்கும் நிலையான கலைமகளின் அருளே பெண்ணுரு

ரபமைந்த உனக்கும் குறைவுளருமோ. உன் அழகுக்கும் க ிக்கும் கற்பையே யுறுதியாகக்கொண்ட சிந்தைக்கும் தகு தி ான நாயகன் எவனோ இருக்கின்றான்.

விருத்தம்.

இன்றலர் மலரோ வாய்ந்தே யினிக்குமாங் கனியோ இன்னுந்
தின்றிடா வமுதப் பேறோ தேனருந் திடுமோர் தேடுனோ
மின்றிரு வனப்பை யென்ன வேண்டுமோ கல்லோ வெங்கத்
துன்றிடு முனை மணக்குந் தூயவ னெவனோ காணேன்.

சகி. இதுவரையில் உனது அற்புதமான குணங்களுக்குச் சமமான குணத்தோன் அகப்படாதபடியால் உனது கன்னிப பருவமாகிய ஒன்பது வயதுக்குள் உனது பிதாவாகிய எங்கள் அரசன் உன்னை மணஞ்செய்து கொடுக்கவில்லை. உனக்கு யௌவனம் வந்து சிலநாள் ஆகியும் உனக்கு இசைந்த கொழுநன் கிடைக்காதது தெய்வத்தின் செயலன்றி வேறென்ன. அவனின்றி அசையாது அணுவுமசையாது கண்டாய். ஆயினும் நீ மனக்குறைகொள்ளக் காரணமில்லை.

சா. சகி! நீ யுரைத்ததெல்லாம் மெய்யாயினும் கன்னிகையை மணம்புரிந்து கொடுக்க மேலோர் விதித்த காலசமயமான ஒன்பதாவது வருஷம் கழிந்துவிட்டபடியால் சாஸ்திரமுறைப்படி நானே கணவனை வரிக்க முயன்றேன். எனக்கு இப்போது பதினைந்தாவது வயது முடிந்தும் எனக்கினிய மணவாளன் கிடைக்கவில்லை. கணவனில்லாக் காதலி பொருளில்லாத மொழிபோல எப்பயன் பெறுவாள்.

வெண்பா.

கால மதிலளிக்குங் கன்னிகையெ லாப்பொருட்கு
மேலாகுஞ் செல்வ மெனவுரைக்கும்— ஞாலமதில்
நற்பருவத் திந்திடா நங்கையுநல் லாக்குதியு
மெப்பயனு மேபயக்கா தே.

என்று சொல்லும் வசனப்படி நாயகனை யடையாத என் பளவனமானது மிகவும் பழிப்பையடைகின்றது.

நீதி. (திடுக்கிட்டு நாலு புறமும் பார்த்து)

சகி ! நம்முடைய விசாரத்தின் மிகுதியால் நாம் பற்றிய ராக்கத்தைவிட்டு வேறுவழி சென்று வெகுதூரம் வந்தனம். மக்கு முன்தோன்றிய விதர்ப்ப நகரமும் மறைந்துவிட்டது. தோ ஒரு பயங்கரமான காட்டில் நுழைந்து விட்டோம். நம் டைய வேலைக்காரர்களும் துணைவர்களும் விதர்ப்ப புரியில் மது விடுதியில் நம்மைக் காணாமல் ஏங்கியிருப்பார்கள். என் செய்யலாம. பகலும் முடிந்தது. அந்திப்பொழுதும் மே ாகின்றது.

விருத்தம்.

ன்மனக் கனல்போ மாறங் கொளிந்தனன் பருதி நின்ற
ன்முக வாட்டங் கண்டே நலியுமிப் பதும மேங்கி
ன்னுமுன் னளகம் போலக் கறுத்திடுந் திசைகள் போலும்
புன்னமேய் நடையா யிப்போதணு குவோ மிடமொன் றிங்கே.

சா. (நன்ருய் நோக்கி).

சகி ! நீ யுரைத்தது மெய். நம்மிருவர் மனங்களும் ஒன்று ட விஷயம் ஒன்றைப் பற்றி நின்றபடியால் அவைகள் நாம் சன்ற வழியைவிட்டு அகன்றன. அஞ்ஞானிகளுடைய இத ம்போல் கங்குல் மிகவும் இருளுகின்றது. பற்றறுதவாசன் ந்திரியங்கள்போல் வனத்தின் மிருகங்கள் அங்கு மிங்கும் த்தித்துஉலவுகின்றன. பாதையும கண்ணுக்குத் தெரியவில்லை.

நீதி. (உன்னிப் பார்த்து) சகி ! நீ மனவருத்தம் கொள்ள வண்டாம். அதோ சொற்ப தூரத்தில் ஒரு வெளிச்சந் தெரி ன்றது, அங்கே மானிடர்கள் வசஞ்செய்யவேண்டும், அதை நாக்கி நாம் செல்வோம்.

(ஒரு வெளிச்சமும் ஒரு வேடனும் வேலைக்காரனும் தோன்றல்).

நீதி. (வேடனை நோக்கி) ஐய ! வந்தனம். விதர்ப்பபுரி இங்கிருந்து எவ்வளவு தூரத்திலிருக்கின்றது? அது எந்தத் திசையிலிருக்கின்றது? வழியிடைந்து மனக்கவலையுற்ற எங்களுக்கு நீர் மார்க்கம் காட்டவேண்டும்.

வேடன். (வெளிச்சத்தினால் இருவரையும் நோக்கி) குயில்களே ! இங்கே வந்திருங்கள். விதர்ப்பபுரி வெகுதூரத்திலிருக்கின்றது. இம்மார்க்கத்தில் புலி கரடி முதலிய துஷ்டமிருகங்கள் மிகவுளவாகையால் நீங்கள் இங்கு செல்வது தகுதியன்று. இவ்விடத்தில் இருந்து நித்திரை செய்து இரவு கழிந்தபின் நீங்கள் செல்லலாம்.

சா. (நீதிமதியை நோக்கி).

சகி ! இப்பெரியோருடைய அருள் நிறைந்த குணத்தை நானென்னவென்று சொல்வேன். இனி நாம் செல்வது உசிதமில்லை. இவ்விரவை இநதப் புண்ணியவானுடனிருந்து கழிப்போம்.

நீதி. ஐய ! தாங்கள் யாவர்? என்ன காரணத்தால் இங்கு வந்திருக்கிறீர்கள்?

வேடன். (சிரித்து) குழந்தைகளே ! இல்லந் துறந்தார்க்கு எவ்விடந்தான் பொருந்தாது. நான் ஜாதியில்வேடன். என்னுறவினர் நெறி என் மனதுக்கிசையாமல் நான் அவரையும் இல்லறத்தையும் விட்டு இக்காட்டில் வாசஞ் செயகின்றேன்.

(சாவித்திரியை நோக்கி)

(மனதுக்குள்) இவளென்ன ! தெய்வமாதோ ! கந்தர்வர்கள் அரசியோ !

# 1-வது அங்கம்.

கலித்துறை.

வண்டார் மலர்க்குழல் பெண்ணரசாமிவள் வார்தனத்தைக்
கண்டால் முனிவர்கள் தாம் விடுவாரவர் காரியங்கள்
கொண்டாடு பூசையு வேதாந்தமும் மதக்கொள்கையும் போம்
பண்டாரமேது மடமேது சைவமும் பாழ்த்திடுமே.

கூடவ அவளொருத்தி யில்லாவிடில் இம்மாது என் கைக்குள் அகப்பட்ட தேவாமிருதமல்லவா. உடனே இவளை நான் அநுபவிப்பதற்குத் தடையாக அவளொருத்தி யிருக்கின்றாள். அவளை யிக்கணமே கொன்று காட்டிற்குள் எறிந்துவிடலாமென்றால் அவ்விதம் செய்தால் இப்பெண் தயிலுடைய முகமும் மனதும் வாடிப்போய்விடுமே.

சா. (நீதிமதியை நோக்கி).

(தனித்து) சகி ! இப்பெரியவர் மிகவும் வைராக்கியம் கொண்ட துறவியாயிருக்கின்றார். இன்றிரவு முழுவதும் அவரோடு மெய்யறிவுக்கின்பந்தரும் சல்லாபம செய்துகொண்டிருப்போம்.

நீதி. (தனித்து) சகி ! ஒருவாறு நீ சொன்னபடி அவர்நல்ல துறவியாயிருந்தாலுமிருக்கலாம். அதை நம்ப வொண்ணாது கண்ணே ! இவ்வுலகத்தில் கபடம் நிறைந்த சந்நியாசிகளும் தீயநடப்பையுடைய பாகவதர்களும் அளவில்லாதிருக்கின்றார்கள். ஜானகியைக் கவர்ந்த தசமுகனும் சுபத்திரையைக் கவர்ந்த அர்ச்சுனனும் சந்நியாசி வேடம் பூண்டல்லவோ அப்படிச் செய்தார்கள். கபடம் நிறைந்தவர்களுக்குத் துறவி வேடமும், வைராக்கியம் நிறைந்த மொழிகளும், திருடுவோனுக்குக் கன்னக்கோலுதவுவதுபோல உதவுகின்றன. நல்லவர்களும் இருக்கிறார்கள். தீயோர்கள் நல்லவர்களினும் மேலான ஆசாரத்துடன் நடிக்கின்றார்கள். நாம் யாரை நம்பக்கூடும். நல்லதுறவிகளுக்குப் பெண் கூட்டத்தில் மகிழ்ச்சியும் உண்மையான பாகவதர்களுக்கு மாதர் பணிவிடையில் ஆனந்தமும் பக்தியுடன்விருத்தி

ருத்திராட்சங்களை யணிவோர்க்குச் சமயம் வந்தால் பிறர்பொருளை யிரக்கமின்றிக் கைக்கொள்ளுவதில் ஆசையுமிருக்குமா? அப் டி எத்தனைபேர்களை நாம் பார்க்கின்றோம்.

சா. சகி! நீ யுரைத்தது பிழையென்று நினைக்கின்றேன். இவ்வேடர் மிகவும் நல்லவரென்றே தோன்றுகிறது.

நீதி. நமக்கு அவரால் ஆவதொன்றுமில்லை. இவ்விரவு கழிந்தபின் செல்லவேண்டிய நமக்கு அவருடைய குணங்களைபற்றி விசாரம் வேண்டுவதில்லை.

(பிரகாசம்) ஐய! இங்கே நாங்களிருவர்களும் கொஞ்சம் நித்திரை செய்வதற்குத் தாங்களிடம் கொடுத்தால் இரவு கழிந்தபின் புறப்பட்டுப்போவோம்.

வேடன். பெண்மணிகளே! நீங்கள் யாவர்? என்ன காரணத்தினால் நீங்கள் இங்கே வந்தீர்கள்? எல்லா வுயிர்களையும் ஓர் உயிரெனப்பார்க்கின்ற யோகிகளாகிய எங்களுக்கு வருவோர்களுக்கு அன்புபுரிந்து உதவி செய்வதே பெரிய சுகம். நீங்கள் உங்கள் இச்சைப்படி சுகமாய் நித்திரை செய்யுங்கள்.

நீதி. உங்கள் கருணைக்காக உங்களுக்கு வந்தனம் செய்கின்றோம். இந்த மடமயில் மத்ரதேசத்தைப் பரிபாலனஞ் செய்கின்ற அசுவபதி மகராஜனுடைய மகள். இவள் பேர் சாவித்திரி.

வேடன். (மனதுக்குள்) சாவித்திரி! சீ! அது நல்ல பேரன்று. நமது சாதியோர்க்கு வழக்கமான ஒருபேரை அவளுக்கிட வேண்டும்.

நீதி. நான் அவளுடைய சகி. எனக்கு நீதிமதியென்றுபேர். ஒரு காரியத்தை யெண்ணி நாங்களிருவர்களும் பாண்டிய தேசம்சென்று திரும்பி மத்ரதேசத்துக்குப் போகின்றோம். எங்களுடைய வேலைக்காரர்களும் எங்கூட வந்த மற்றவர்களும்

விதர்ப்பபுரியிலிருக்கின்றார்கள். நாங்கள் இன்று சாயங்காலையில் நகரத்துக்கு வெளியிலிருக்கும் சோலையின்கண் உலாவித்திரிந்தோம். வழிதவறி நகரைவிட்டு வெகுதூரம் வந்தோம்.

(சாவித்திரியை நோக்கி).

சகி ! நீ மிகவும் வழிநடந்தாய். (ஒருஇடத்தைக்காட்டி) நீ இவ்விடத்தில் படுத்து நித்திரை செய்யலாம்.

சா. சகி ! (உட்கார்ந்துகொண்டு) ஏனோ எனக்கு மிகவும் தாகமாயிருக்கின்றது. நான் அருந்துவதற்குக் கொஞ்சம் ஜலம் வேண்டும்.

வேடன். ஐயோ ! தாகத்தாலாவது பசியாலாவது ஒரு பிராணி வருந்தினால் என்மனம் சகிக்காது. அம்ம, நீதிமதி ! இங்கிருந்து கொஞ்ச தூரத்தில் ஒரு தடாகம் இருக்கின்றது. நீ சீக்கிரமாகப் போய் ஜலம் கொண்டுவா. எனது ஊழியனாகிய இந்த வல்லன் உனக்குத் துணையாக வந்து அந்தத் தடாகத்தைக் காட்டுவன்.

(ஊழியனை நோக்கி).

அடவல்ல ! நீ அந்த மாதுடன் தடாகத்துக்குத் துணையாகப் போய்வா.

[அவன் காதில் ரகசியமாய் சில வசனங்கள் மொழிந்து]

நீதிமதி! சீக்கிரமாகச்சென்று புனல்கொண்டு வருவையாக.

நீதி. [சாவித்திரியை நோக்கி].

(தனித்து) உன்னை இவ்விடத்தில் தனியாக விட்டுவிட்டுப் போக என் மனம் இணங்கவில்லையே. உனக்கோ சகிக்கமுடியாத தாகம் உண்டாகியிருக்கின்றது.

சா. (தனித்து) இப்பெரியவர் எனக்குத் துணையாயிருக்கின்றார். நீ சீக்கிரம் போய்வரலாம்.

நீதி. சகி ! அப்படியே செய்கின்றேன்.

(மன்னுக்குள்) என்ன காரணத்தினலோ [illegible] மனம் மிகவும் சஞ்சலத்தை யடைகின்றது. சாவித்திரியை இங்கேவிட் டுப் போவது பிழையென்று என் இதயத்துக்குள் யாரோ உரைப்பதுபோல் இருக்கின்றதே. நான் என்ன செய்வேன். அவளுக்குத் தாகமும் மிகுதியாயிருக்கின்றது. இருக்கட்டும்.

வெண்பா.

எங்கள் பூ மன்ன னியற்றும் பலவறமும்
தாங்க விழிபுனையுந் தோகையிவள்—சங்கையெது
மில்லாது செல்லு மினியநெறி யுந்துணையாய்
நில்லாதோ தானவட்கு நேர்.

(நீதிமதியும் வலலனும் மறைதல்).

வேடன். குயிலே! எனக்கும் மிகுதியான தாகம் உண்டா யிருக்கின்றது. அதை நீ தான் தீர்க்கவேண்டும்.

சா. ஐய! நீதிமதி உதகம் கொணார்ந்தவுடன் முதலில் நீங் கள் அருந்தலாம். தூயவரே! உங்கள் ஆசிரமம் எங்கேயிருக் கின்றது? தவப்பேறு நிறைந்த உங்கள் நிலையே சிறப்புள்ளது.

கலித்துறை.

முள்ளென் றறிந்ததைக் கையான் மருவிடும் மூடனெனக்
கள்ளம் பெருகிய பொல்லா வுடல்தருங் கட்டமதை
உள்ளந் தெரிந்தும் வெறுக்காத மாந்த ருறவகற்றித்
தள்ளிப் பிழைக்குமுமைப்போன்ற பேர்மகத்தானவரே.

மாதவரே! இக்காயமானது முன் கருமத்துக்குப் பலனாக வும் இனி ஓய்வில்லாத கருமத்தை விளைக்குங் கருவியாயுமிருக் கின்றது. அதின் சம்பந்தங்களை வெறுத்துக் காடுசென்று புலன்களை யொடுக்கி ஞானநெறியில் நிற்கும் உங்கள் பெருமை யே பெருமை.

சா. மனதுக்குள் (திடுக்கிட்டு எழுந்து காதுகளைக் கையினால் மூடிக்கொண்டு).

ஐயோ! இதென்னபாவம். இவருரைத்த வேதாந்தத்துக்கு இதுதானா முடிவு. இவரைத் தூயவரென்று நினைத்தேனே. என் காதில் விழக்கூடாத வசனங்களை இவர் உரைக்கின்றாரே. நீதிமதி சொன்னது முழுதும் உண்மையாயிற்றே. அவள்மிகவும் உலகத்திற் பழகின புத்திசாலியாகையால் சந்நியாசிகளுடைய வேடத்தையும்பாகவதர்களுடைய வசனத்தையும் வைதீகம் வேடம் பூண்டவர்களுடைய விபூதிருத்திராட்சங்களையும் நம்பவொண்ணாதென்று திண்ணமாய்ச் சொன்னாள். இருந்தாலும் உலக சுகங்களை, வாந்திசெய்தஅன்னம்போல வெறுத்த சந்நியாசிகளும், சகல கருமங்களையும் செய்து பலாபேட்சையின்றி சுகதுக்கங்களை ஒன்றுபோல எண்ணிவரும் பாகவதசிரோமணிகளும், எல்லாம் அவன்செயலையன்றி வேறொன்றுமில்லையென்னும் உறுதியுடன் இக்காயமும்கரணங்களும் அவன் பணிவிடைக்காக ஏற்பட்டனவென்று கருதி அதற்கடையாளமாகத் தம்மேனியில் திருநீறணிந்து ருத்திராட்சமாலை புனையும் புனிதர்களும், அங்குமிங்கும் சிலர் இல்லாவிடில் உலகம் பிழைப்பதெவ்வாறு.

(பிரகாசம்) ஐய! நீர் வஞ்சனையான ஒருவேடங்கொண்டு வழியிற் செல்லுவோர்களுடைய தனங்களைக்கவருகின்றசோரர்கள்போலத் தனியாளாகிய என்னுடைய தர்மத்தைக் கெடுக்க நினைக்கிறீர். ஏன் இந்த அக்கிரமததில் உமது மனம் செலலவேண்டும்.

வேடன். என் கண்ணே! என்னால் சகிக்க முடியவில்லை. நான் நீ நினைத்தபடி தவசியல்ல. நான் மிகவும் விஸ்தாரமான வேடர் நாட்டுக்கு அரசன். இவ்வழியில் வந்த அநேக மாதர்களைச் சிறைப்பிடித்து என் வீட்டில் வைத்திருக்கின்றேன். அவர்களெல்லாம் உனக்குப் பணிவிடை செய்ய என் நாட்டுக்கு நீ

அரசியாகி என் பிராணனுக்கும் நாயகியாய் சகல சுகங்களையும் அநுபவிப்பாயாக. உன்னுடைய பொன்போன்ற மேனியையும் அதன் அழகையும் பார்க்கில் துறவிகளும் காமுறுவார்களே.

கலித்துறை.

தேனைப் பழிக்குமென் கண்ணேயுன் வாய்ச்சொல் சிறந்தவிழி
மானைச் சினந்திடும நின்கொங்கை கண்டியர் யாவரையும்
கூனிக்குறுகுந் துறவிகள் நொந்து குலைவொன்றால்
நானெப்படிச் சகிப்பே னருள்வாய் பெண்கள் நாயகமே.

(என்று சொல்லிக் கிட்டவருகின்றான்).

சா. (காதிற் கைவைத்து மூடிக்கொண்டு)

ஐய! வேண்டாம், வேண்டாம். கொடுமையான பாவத்திற் புகவேண்டாம். நீர் செய்ய நினைக்கும் பாவத்தை நீர் ஒருதரம் புரிந்தால் நூறு ஜன்மங்களில் இடைவிடாது நீர் நற்கருமம் புரிந்தாலும் அப்பாவத்தைத் தொலைக்க முடியாதே. ஒருகண்டை மீனைப்பிடிப்பதற்காக ஒரு ஏரி முழுவதையும் வெட்டித் தண்ணீரை அகற்றலாமா. அந்நிய ஸ்திரீயை நினைப்பதினும் ஆலம் உண்ணலாமே. அவள் கலவியுறுவதினும் அனலில் முழுகலாமே. அவளைத் தழுவுவதினும் கொதிக்கின்ற நெய்ச்சாலில் விழலாமே. அவள் கையைப் பிடிப்பதினும் விஷத்தைக் கக்குகின்ற அரவைக் கையாலெடுக்கலாமே. அவளை சினேகிப்பதினும் நேராக காலனையே சினேகிக்கலாம். ஐயா! இந்தக்கொடிய கருமத்திலேன் பிரவேசிக்கின்றீர்.

**வேடன்.** மங்கையே! பிரமன் உன் உடலைப் பொன்னாலும் பூவாலும் இதழாலும் செய்து உன் மனத்தை வயிரத்தால் செய்துவிட்டான். உன் சிறந்த அழகுக்குத் தக்கபடி உனக்கு மனப்பழக்கமில்லை. சுகமறியாத வனவாசிகளும், சுகங்கிடையாத தரித்திரர்களும், சுகத்துக்கு யோக்கியமில்லாத விருத்தாப்பிய

ர்களும், சுகத்துக்கு வேண்டிய புண்ணியம் புரியாத அலிகளும் பிதற்றும் வசனங்களை உன் வாயால் உரைப்பது நியாயமன்று உன் கலவி கிடைத்தால் நீமேற்சொல்லிய ஒவ்வொன்றுக்கும் நான் அஞ்சேன்.

வெண்பா.

ஆலமதை யுண்பேன் அனல்மூழ்குவேன் கொதிநெய்ச்
சாலில்வீழ்வேன் அரவைத் தானெடுப்பேன்—காலனெதிர்
வந்தாலும் செல்வேன் மடவன்னமேயுனக்குச்
சந்தோஷ மாகுஞ் சரி.

(என்று சொல்லி சாவித்திரியின் மேல் கைபோடவருகின்றான்.)

சா. (தூரத்தில் ஓடி நின்றுகொண்டு உரக்க).

ஐயோ! நான் என்ன செய்வேன்.

நீதிமதி! தாகம் அடங்கிவிட்டது. உன் வார்த்தையை நிந்தித்த நான் அதற்குப பலனை இப்போது அனுபவிக்கின்றேன். ஜலம் வேண்டுவதில்லை. உடனே நீ வரமாட்டாயா.

வேடன். கிளியே! நீதிமதி இனி இங்கே வரமாட்டாள். அவளை இதற்குள்ளாக வல்லன் யமபுரத்துக்கு அனுப்பியிருப்பான். என்னைத்தவிர வேறொருவரும் உனக்குறவில்லை. (என்று அவளைத் துயர்வான்.)

சா. ஐயய்யோ! நானினி யென்ன செய்யத்தக்கது. எனக்கு யார் துணை.? சகல வுயிர்களையும் காக்கும் பரமேசுவரி.

விருத்தம்.

நீதி யிலையோ எனக்கருளும் நெறிநீ யறிந்த திலையோவெப்
போதும் நினதா ரருள்பெருகப் புரிய விலையோ நல்வினைநான்
ஏது மறியா தவளன்றோ வின்றேன் கையில் வீழாதிப்
பேதை துயரம் போக்கிவிடப் பெருமா னெமனு மங்கிலையோ.

வேடன். பெண்ணே! நீ தானாய் வர வெட்கப்படுகின்றாய். உன்னைப் பலவந்தமாய் மருவுவதுதான் உசிதம்.

(என்று உரைத்து அவளைத் தழுவ வருகின்றான்).

சா. எளியார்க்குத் துணையாயிருக்கும் பரம்பொருளே.

(இதைக்குள் மடமடவென்று சத்தமும் இறக்கினது ஒரு பிராணியின் விகாரமான ஒலியும் கேட்க).

வேடன். இதோபார்! புலி ஒன்று ஓடிவந்து கீழே விழுந்தது. ஆ! ஐயோ-என் தலையில ஒரு அம்பு பாய்ந்ததே!

(என்று சொல்லிக் கீழே விழுந்திறந்தான்).

சா. இதென்ன புதுமை. இப்பாதகன் திடீரென்று இறந்தான். நீதியே உருவாயமைந்த சர்வேசுவரி. உன் அருளிருக்கில் எவ்வினைதான் விலகாது.

(கைகூப்பித் தண்டனிட்டு).

விருத்தம்.

கோதாய்ந்த மாமுனிவர் தேடித் தேடிக்
கூவியுங் காணுத்தனமே குணத்தின வெற்பே
வேதாந்த வேலிவினை முக்தே நின்டால
மேவியறி வோரகல மற்றோர்க் கெல்லாம்
சூதேசூ தகன்றதருப் டணமே ஓயாச்
சுகலகரி யேதுலங்கா னந்தரூப
மாதேபோ லமைந்திலகு முமையே யுன்றன்
மலரடியைத் துணைக்கொண்டார் வருந்த லுண்டோ.

(நீதிமதிதோன்றல் பரபரப்புடன்).

நீதி. [மனதுக்குள்] என் சகி என்ன செய்கின்றாளோ தெரியவில்லையே. இவ்விடத்தில் ஒருபிராணி கொல்லப்படுவது

போல் ஒரு பயங்கரமான ஒலி கேட்கப்பட்டது. தடாகத்தைக்காட்டுகிறேனென்று வழிகாட்டவந்த அப்பாவி என்னை ஒரு கிணற்றுக்குள் தள்ளிவிட முயற்சி செய்தான். அவன் கால சறுக்கிக் கிணற்றில் விழுந்தமையால் நான் பிழைத்தேன். அப்பெரியவரைச் சிலம்பொருந்திய போக்கியமொன்றும வலலனை அவருடைய சன்மார்க்கநதங்கிய சீடன் என்றும் எண்ணியதற்கு இவ்விதம் நடந்தது.

(சாவித்திரியைப் பார்த்து).

தெய்வத்தினருளால் என் சகி சௌக்கியமாயிருக்கின்றாள். (பிரகாசம்). என் கண்மணியே! இதோ ஜலம் கொண்டுவந்திருக்கின்றேன். இதை அருந்தித் தாகத்தைத் தீர்த்துக்கொள்.

சா. சகி! சகி! நீதிமதி! (என்று அவளைத் தழுவிக்கொண்டு மூர்ச்சையானாள்).

நீதி. குயிலே! உனக்கேனிந்த மயக்கம். விழித்துக்கொள். என்ன காரணத்தினால் உன் உடல் இப்படி நடுங்குகின்றது.

(கீழே கிடக்கும் வேடனைப்பார்த்து).

ஐயோ! இதென்ன கொடுமை. இவர் இறந்து கிடக்கின்றாரோ. அவருடைய ஒலிதானோ நான்கேட்டது. அவ்வொலியினாலும் இவருடைய மரணவஸ்தையைக்கண்டும் குழந்தையாகிய என் சகி பயந்துகொண்டிருக்கிறாள். பாதி ராத்திரியாய்விட்டதே. நானிங்கே என்னசெய்வேன்.

[ஒரு அரசகுமாரன் வில்லுடன் தோன்றல்].

[தூரநின்று நீதிமதியையும் அவள் மடிமேற் படுத்திருக்கும் சாவித்திரியையும் பார்த்து.]

**அரசன்.** (மனதுக்குள்) அவர்கள் சிறிய பெண்கள்போல் தோன்றுகிறார்கள்.இந்தஇரவில்அவர்கள்என்னசெய்கின்றார்கள்

நீதி, சகி! கொஞ்சம் கண்திறந்துபார். உடலில் உனக்கு
ன்ன உபாதி செய்கின்றது. இதோ என் உயிர் போகின்றது.

அரசன். [மனதுக்குள்] அடா! அடா! இதென்ன கஷ்டம்
யாரோ இறக்கின்றதுபோலவும் ஒருத்தி வருந்துகின்றது போ
லவு மிருக்கின்றதே? அது என்னவென்று பார்க்கவேண்டும்.

[சமீபத்தில் போய்].

[பிரகாசம்] அம்ம! நீர் யார்? நீரேன் வருந்துகிறீர்?
மதுமடிமேலிருப்பவர் யார்? நான்செய்யவேண்டிய உதவி
இருக்குமாயின் அதைச்சொல்லலாம்.

நீதி. ஐய! இவள் மத்ரதேசத் தரசனாகிய அசுவபதிமகாரா
ஜாவின் பெண்ணாகிய கன்னி. அவள் பேர் சாவித்திரி. நான் அவளு
டைய சகி. நான் ஜலம்கொண்டுவரப்போனபோது என்ன கார
ணத்தினாலோ பயந்துகொண்டு மூர்ச்சையாயிருக்கின்றாள்.

அரசன். அம்ம! நீர் பயப்படவேண்டாம். சீக்கிரமாக உம
து சகி சௌக்கியத்தை அடைவள்.

[நீதிமதியின் அருகிலிருந்த ஜலத்தில் தன்னுடைய வஸ்தி
ரத்தைத் தோய்த்து சாவித்திரியுடைய முகத்தைத் துடைக்
கின்றான்].

நீதி. [சாவித்திரி விழிப்பதுகண்டு].
என்கண்ணே! என்னைப்பார். எனக்குத் தைரியமாக
ஒரு வார்த்தை சொல்.

சாவி. சகி! சகி! நீ எப்படிவந்தாய். உன்னைவலலன் கொன்று
போடுவானென்று அந்தப் பாவி உரைத்தானே.

நீதி. நான் சுகமாய்த் தப்பிவந்தேன். அந்தப்பாவி யென்று
யாரை உரைக்கின்றாய். நீ ஒன்றுக்கும்பயப்படவேண்டாம். அப்
பெரியவர் எப்படி இறந்தார்.

சாவித்திரி. நீ இவ்விடம் விட்டுப்போன பிறகு ஒரு பெரியவர் போல் வேஷம்பூண்டிருந்த அந்தப்பாதகன் அவனுடைய சுயரூபமாகிய வேடரூபத்துடன் என்னை (பிறகு வசனிக்க முடியாமல் உடல்நடுக்கத்துடன் நீதிமதியைத் தழுவுகின்றாள்).

நீதிமதி. அட! அட! என்னபாவம் உன்னை இவ்விடத்தில் தனியாகவிட்டு விட்டுப்போக என்மனம் சற்றேனுமிணங்கவில்லை. நீதாகத்தால் வருந்துவதைப்பார்க்க முடியாமல் நான்சென்றேன் ஐயோ! அவனுடைய கட்டளைப்படி தான் வல்லன் என்னைக்கிணற்றில் தள்ளிவிட முயற்சித்தான். அதுகிடக்கட்டும் அவன் எப்படி இறந்தான்.

சா. அதன்காரணம் நானறியேன் நான் சொன்ன நீதியுரைத்தும் அதைக்கேளாது அப்பாவி வெறிகொண்டவன்போல் என்னைத் துயர்ந்துவந்தான் திடீரென்று கீழேவிழுந்திறந்தான்.

அரசன். (மனதுக்குள்)

இதென்னபுதுமை! நீதியே இவளுருவாய் வந்தது போலிருக்கின்றது.

[வேடனருகில்போய் விளக்கின் வெளிச்சத்தைக்கொண்டு அவன் தலையை உற்றுப்பார்த்து].

பிரகாசம். இவன் தலையில் ஒரு அம்பு பதிந்திருக்கின்றது [அம்பைப்பிடுங்கிப் பார்த்து பரபரப்புடன்] ஐயோ! நான் என்னபாவம் சம்பாதித்தேன். என்னுடைய ஆச்சிரமத்தில் வளர்கின்ற குருமானை அக்கிரமமாக ஒருபுலி தூக்கிப்போயிற்று. அந்தப்புலியைக்கொல்வதற்காக இந்த அம்பை நான் எய்தேன் அதுமிகுதியான வேகத்தால் புலியையும் கொன்று பின்பு இவனையுங்கொன்றது. ஒருவனைக்கொன்றபின் என்னுயிரை நான்விடாது தரித்திருப்பது மிகவும் பிழையல்லவா.

சீலா. (எழுந்திருந்து)

நீர் அரசகுலத்தில் பிறந்தவரென்று நினைக்கிறேன். தீயோரைத் தண்டிப்பதும் எளியாரைப் பாதுகாப்பதும் உமது தருமமல்லவா. நான் தனியாயிருந்தவேளையில் அப் பாவி, வஞ்சனையான, துறவி வேடத்துடன் என் கற்பை அழித்து, என் ஜன்மத்தைப் பாழாக்க முயன்றான். நான் பலவாறு உரைத்தும் அவன் கேட்கவில்லை. கடைசியாய் அவன் என்னை பலாத்காரம் செய்ய வருகையில் உமது அம்பானது அந்த ரிஷீகேசனுடைய சக்கிரம்போல்வந்து அவனையும் கொன்று முதலில் என் மானத்தையும்பின்பு என் உயிரையுங் காப்பாற்றி என்னைப்பெற்றோராகிய அசுவபதி மகாராஜனுடைய குலத்தின் பெருமையையும் நிலைநிறுத்திற்று. உமது கருணையால் நான் பிழைத்திருக்கிறேன். அப்பாவியைக் கொன்றதும் மிகுதியான தருமமாயிருப்பதால் அதற்கு நீர் வருந்தக் காரணமில்லை.

நீதி. ஐயா! நீர் யார்? என்ன காரணத்தினால் உமது உதவி சமயத்தில் எங்களுக்குக் கிடைத்தது? எங்கள் குலத்தைக் காப்பாற்றின தெய்வமல்லவோ நீர்.

அரச. அம்மா. நான் சாலவதேசத்து அரசனாகிய துமத்சேனமகாராஜாவின் மைந்தன். என்பேர் சத்தியவான். என்னுடைய மாதா பிதாக்கள் சமீபத்திலிருக்குமோர் ஆசிரமத்தில் வாசஞ்செய்கின்றார்கள். அந்த ஆசிரமத்தில் வளரும் ஒரு மானை அக்கிரமமாக ஒருபுலியானது தூக்கிப் போயிற்று. அந்த மானை விடுவிப்பதற்காக நான் அந்தப்புலியின்மேல்கடியவேகத்துடன் எய்த அம்பானது அந்தப் புலியைக் கொன்று மானை விடுவித்ததுமன்றி இவனையும் கொன்றது. அர்த்தராத்திரியாயிருப்பதால் நீங்களிருவரும் எங்களாசிரமத்தில் வந்திருந்து விடிந்ததின் மேல் போகலாம்.

நீதி சகி. இவர் சொல்லுகிறபடி செய்யலாமல்லவா.

சாவி. உயிரையும் பெருமையையும் பாதுகாத்த அவரு டையசொல்படியே நடப்போம்.

(எல்லாரும் மறைதல்)

(முதலாவது அங்கம் முடிந்தது)



# இரண்டாவது அங்கம்.

(நாரதர் தோன்றல்)

(மனத்துள்). கணக்கில் அடங்காத நாமங்களும் ரூப ங்களும் புதியன புதியனவாய் உண்டாகி அழிந்துகொண்டிரு க்க அவைகளுக்காதாரமான பரம்பொருள் மட்டும் விகாரமின் றி நிலையாயிருக்கின்றது. அதை யறியாத மானிடர்கள்தான் சம்சாரிகளாகிச் சுகமில்லாதலைகின்றார்கள்.

விருத்தம்

அன்றி ருந்ததும் ஆனதும் உண்மைபோல்
இன்றி ருப்பதும் இங்கினி யாவதும்
சென்றி டத்திரி யாமல தேநிலை
ஒன்றி நின்றிடும் ஓர்பொருள் எங்குமே.

இக்காலத்தில் புவியையாளும் அரசர்களுக்குள் மத் தேசத் தரசனான அசுவபதிமிகவும் தர்ம சீலன். அவனுடைய பெண்ணாகிய சாவித்திரி தேவமாதர்க்கும் வணங்கத்தக்க மேலானகுணம்பொருந்தியவள். அவளைவிட்டுப்பிரிந்து வெ

நாளானபடியால் அவ்வரசன் மிகுதியாய் வருந்துகிறான். அவளும் நீதிமதியும் நேற்று இரவில் துமதசேனராசாவின் ஆச்சிரமத்திலிருந்து அவ்வரசனாலும் அவ்வரசன் மனைவியாலும் உபசரிக்கப்பட்டு இப்போது தான் அந்த ஆச்சிரமம்விட்டு இந்தவழி வருகினறார்கள். சத்திய வானுடைய குணாதிசயங்களைப்பார்த்து ஆனந்தித்து அவனையே தன் கணவனாகச் சாவித்திரி மனத்தால் வரித்துவிட்டாள். அவ்விருவர்களும் சன்மார்க்கம்நிறைந்த மனமுடையவர்கள். அவ்விருவரும் தம்பதியாகச்சேரில் எல்லாத்தர்மங்களும் வாசனை நிறைந்த பொன்மலர்போல மலாய் விளங்கும். பதிவிரதமும் கிரகஸ்தநீதியும் மென்மேலும் சிறைப்பையடைந்தது. நானிங்கேயிருந்து அந்தக் குழந்தையைக் கண்களிக்கப்பார்த்து விட்டுப்போகவேண்டும்.

(என்று ஒருமரத்தின்கீழ் உட்காருகின்றார்).

(சாவித்திரியும் நீதிமதியும் தோன்றல்).

நீதி. சகி! சாவித்திரி! புண்ணியம் செய்தவர்களுடைய பாக்கியம்போல இதோ சூரியன் உதயமாகின்றான். துஷ்டர்களுடைய வாழ்வுபோல் இருளானது மறைந்துவிட்டது. தன் மனதுக்கு இனிமையான நாயகனைக்கண்ட பதிவிரதையின் முகம்போல இதோ, தாமரை மலர்கள் மலர்ந்து பிரகாசிக்கின்றன.

சாவி. (லச்சையுடன் சிரித்து) சகி! நன்றாய் உரைத்தாய். தாமரை மலர்களிடத்தில் மிகவும் அருமையான பதிவிரதம் நிறைந்திருக்கின்றது.

நீதி. விதர்ப்பபுரியில் நம்முடைய வேலைக்காரர்கள் முதலியவர்கள் நம்மைக்காணுமல் வருந்துவார்கள், நாம் சீக்கிரமாக போகவேண்டும். நேற்று இரவில்நாம் அடைந்த வருத்தத்தையும் பிறகு அந்த அரசகுமாரனால் செய்யப்பட்ட உபசாரத்தையும் நினைக்க நினைக்க அச்சரியம் உண்டாகின்றது.

சாவி. (புளகம் அபிநயித்து)

சகி! அவனுடைய நற்குணங்களையும் பராக்கிரமத்தையும் நான் என்னென்றுரைப்பேன். அவனுடைய ஒரு அம்பானது அந்த வேடன் உயிரையும் அப்புலியின் உயிரையும கொன்று உன் உயிரையும் என் உயிரையும் காப்பாற்றிற்று. அவன் தாயார் திருவே உருவாயமைந்ததுபோலிருக்கின்றாள். அவன் தந்தையோ அறக்கடவுள்போல தயை சாந்திமுதலிய நற்குணங்களால்விளங்குகிறார்.

நீதி. நீ கேட்கவில்லையா. அப்பெருமான்தான் சாலவதேசத்தை யாண்ட துமதசேனராசன். ஒரு கொடிய அந்தணனுடைய சாபத்தால் அவனும் அனுடைய மனைவியாகிய அக்கோமாட்டியும் கண் தெரியாத குருடர்களாகி தங்கள் நாட்டையும் இழநது தங்கள் குமாரனை அந்தசசத்தியவானுடன காட்டில் வாசம்செய்கின்றார்கள்.

சாவி. ஐயோ. அவ்வளவு நற்குணம்பொருந்திய சாதுக்களுக்கு எப்படி இந்தத் தீமைகள்வந்தன. உலகத்தில் நீதியில்லையா?

[என்றுகண்ணீர் விடுகின்றாள்]

நீதி. நீ என்னஒன்றும் அறியாத குழந்தைபோல வியசனப்படுகின்றாய். நல்லவர்களையும் தீயோர்களையும் பக்ஷபாத மில்லாமல் கர்மமானதுவருத்துகின்றது.

[விருத்தம்]

குற்றமில் லார்தங் குறையுமெள் ளளவும் குணமிலார் சு
[முமோர் பாவ
சற்றுமெண் ணார்தம் வறுமையும் தீயோர் தம்மைமே
[மருவுநற் றிருவு

உற்றநன் னிதியார் சேயிலா தருமங் குணமும் வகையிலா
[துவரைச்

சுற்றியே மகவும் ஞாலமீ தமைதற் ருசையே வினையினும்
[பயனே

கண்மணி! இந்த உலகத்தில் ஒன்றிருந்தால் மற்றொன்று இருக்கிறதில்லை. மானிடர்களுடைய கர்மங்களே மேலான காரணங்களாகயிருப்படனவால், அற்பர்களிடத்தில் செல்வம் சேர்வதும், நல்லோர்களுக்குத் துன்பம் உண்டாவதும், நிலைகெட்ட மாதர்களுடைய சௌந்தரியம் போலவும், இரக்கமில்லாதவர்களுடைய மகிழ்ச்சிபோலவும் வினையின் வழியால் இந்தப்பாழான உலகத்திற்குச சகஜமாயிருக்கின்றன.

சாவி. சகி! அந்த அரசகுமாரனுடைய பேரை இன்னம் ஒருதரம் சொல.

நீதி சகி! அவன் பேரை மந்திரம்போல் ஜபிப்பாய்போலிருக்கின்றதே. அவன்பேர்சத்தியவான்.

சாவி. [லச்சையுடன்] சகி! அவனுடைய படம் ஒன்று நீ எழுதமுடியுமா. அவனழகைப் பற்றி நீ என்ன நினைக்கின்றாய்.

(நீதி) அதுஉனக்கல்லவோ நன்ருய்த் தெரியும்.

சாவி. சகி! அதுகிடக்கட்டும், அவன் தந்தை தாய்க்கு என்ன பணிவிடைகள் செய்கின்ருன். அவன் பாக்கியமே பாக்கியம். அவனே இகத்தில் யாவையும் பெற்று பரம பதத்தையும் நிலைபெற க்கைப்பெற்ருன். அவனை மணஞ்செய்யும் மங்கையே அதிர்ஷ்டசாலி. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் பழமொழியை அவனே நிலைநிறுத்துகின்ருன்- சகி!

என்ன இருந்தாலும் அவனிடத்திலும் ஒரு குறைவு இருக்கின்றது.

(நீதி) சகி! அதென்ன.

சாவி. நான்சொல்லவா. (லச்சையுடன்)

விருத்தம்

நன்முகத் தெழிலும் பெருகுமோர் மார்பும் நளினமேங் [கிடுவிழி யிணையும்

வன்மலைப் புயமும் புன்னகை முழுதும் வாய்ந்தசெங் கனி [யிதழ் வாயும்

சொல்மிக்ச் சுவையாய்ப் புகலுநற் பேறுந் தூயவாய் [மையுமுளா னெனினுங்

கன்மனத் தவனென் றவனையான் நெஞ்சிற் கருதுவே [னதுளம் பகர்வாய்

[நீதி] சகி! நீயேன் அக்கிரமமாக அவனைத்தூறுகிறாய்.

(மனத்துள்) வெண்பா.

வேந்த னரும்புதல்வன் மெய்யறிவா ளன்வீரன்
சாந்தன் குணநிறையுந் தன்மையான்—வந்துமுயர்
நல்லழக னின்னோனை நங்கையெவள் தான்கண்டே
புல்லநினை யாள்நெறியே போய்.

கோடி மன்மதனைப்போல விளங்குகின்ற சத்தியவானுடைய அழகு சௌரியம் முதலிய குணங்களால் சாவித்திரியுடைய மனம் கவரப்பட்டிருக்கிறது. இரசத்தை தக்க யௌவனத்தின் மகிமை அத்தன்மையுடையது.

விருத்தம்.

பருதி கண்டிடு கஞ்சமும் பார்மதி
உறுதி கண்டிடு மாம்பலும் உண்மையாய்ச்
சுருதி கண்டிடு தூயவர் சிந்தையும்
பொருதும் நேயனைக் கண்டவள் புந்தியே.

(பிரகாசம்) சகி! மெல்லிய மலர்போலும் இனிய சுபாவ
ழையுடைய அவ்வரசன் மைந்தனைக் கன்மனத்தோனென்று
ன் அநியாயமாய்ப் புகல்கின்றாய்.

(சாவி) (லச்சையுடன்) சகி! நேற்று இரவில் அந்த வன
தில் அவன் வரும்போது நீ வருகிறாயென்று எண்ணி அவன்
கத்தைத் ஒருதரம்பார்த்தேன். அவன் என் முகத்தை ஒரு
ம் கூடப்பாராமல் பிடிவாதமாயிருந்தான். அதனால்
'வன் வயிரம்போன்ற மனத்தானென்று எண்ணுகிறேன்.

(நீதி) (சிரித்து)

திருடுவோருடைய மதியின்மையாலன்றி அவர் திரு
டு வெளியாகிறதில்லை. அவன் முகத்தை நீ ஒருதரம் பார்த்த
ன் அப்பால் நீ பாராவிடில் உன்முகத்தை அவன் பாராதது
க்கெப்படிப்புலப்பட்டது.

(வழியிலிருக்கும் மரத்தின் கீழேயிருப்பவரைப்பார்த்துத்
டுக்கிட்டு)

யாரோ ஒரு மாதவர் அந்த விருட்சத்தின் கீழ் வீற்றிரு
'ன்றார்.

(சாவி) சகி! நாம் சமீபத்தில் போய்ப்பார்ப்போம்.

(நீதி) (உற்றுப்பார்த்து)

என் கண்ணே! நம்முடைய நல்லகாலத்தினால் கரு
க்கடலாகிய நாரத மகாமுனிவர் நமக்குத் தரிசனம் தருவ
ற்காக இங்கே வீற்றிருக்கின்றார். அவரை வந்தனம் செய்
யாம்.

(இருவரும் அவர் முன் வணங்கி)

(சாவி) விருத்தம்.

கால மென்பது நீகலை யாம்பெரு
வேலை யின்கரை-கண்டது நீமிகு

ஞால மீது நிறைந்து விளங்குநல்
மூல மெய்ப்பொரு ளாய்ந்திடு முத்தனே.

நொந்தோர்களுடைய குறையை அகற்றுகின்ற பாசமுத்திரமே! என் பெரியோர்செய்த பூசையால் உமது தரிசனம் எனக்கு இங்கேகிடைத்தது.

[நாரதர்]. ஏ குழந்தைகளே! உங்களுக்கு மங்களம்.
(சாவித்திரியை எடுத்து மடிமீது வைத்துக்கொண்டு)

சாவித்திரி! உனக்கும் உன்னை அண்டினவர்களுக்கும் மங்களமானது அடிமைப்பட்டபொருள். உனக்கு நான் என்ன புதிதாக ஆசீர்வாதம் சொல்லப்போகிறேன்.

விருத்தம்

மாமன்மா மியர்கள் கண்ணுய் வருமண வாளன் வேண்டிக்
காமுறும் உயிரா யீன்ற காவலன் குலமும் நீசேர்
பூமனின் குலமும் ஓங்கப் புரியுநற் றேவாய்ப் பூவின்
பாமபோ லரசி யாகிப் பாரினில் வாழ்வை யம்மா.

(எழுந்து மறுபடியும் வணங்கி)

[சாவி.] எனது குலதெய்வம்போன்ற மாதவரே உமது ஆசிர்வசனத்தைச் சிரசால் வகித்தேன். உமது வாயிலிருந்து புறப்படுவதெல்லாம் வேதமாயின் உமது ஆசீர்வசனம் பெற்றவர்களுக்குக் குறையென்பதில்லை. அறியாதவர்கள் உம்மைக் கலகத்தை விளைவிக்கும் ஒரு முனிவனென்று நினைக்கின்றார்கள். அஞ்ஞானிகளுக்குரிய புராணவசனமும் அப்படியே மொழிகின்றது. தமோகுணம் நிறைந்தவர்களைப் பிரவிர்த்தியில் ஏவுதலுக்காக ஓரிடத்திராது நிகழும் விந்தைகளை ஆங்காங்குரைத்துப் பிராணிகளைக் கருமத்திலே நடத்துகின்றீர். பிரவிர்த்தியில் முழுகினவர்களைக் கைதூக்கிவிடுமாறு ஓங்காரத்தின் பொருள் உரைக்கும் குருசுவாமியாயிருக்கின்றீர். பிரவிர்த்தியை விடுகின்ற முமுட்சுக்களுக்கு மகதீயென்றும் வீணையின்

ஒலியால் சப்தத்தைக் குணமாகவுடைய சிதாகாசத்தில் அவர்களுடைய மனம் லயிக்கும்படிசெய்து அவர்களைப் பரமாநந்தத்தில் முழுக்காட்டுகிறீர். உமது வீணையின் சுருதி அமைந்த நாதம் ஒலிக்குமளவும் சிருஷ்டியும் அந்த சுருதி கலைந்து அமரும்போது பிரளயமும் உண்டாகுமெனில் நீரோ ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களையும் வகித்திருக்கின்ற பரமபுருஷர். உமது பெருமையையாரும் அறிவதற்குத் தடையாகப் பிரவிர்த்தி நிறைந்த புருடன்போல் நீர் நடிக்கின்றீர். நரனுடைய முக்திக்கு ஏதுவாகிய 'நாரம்' என்னும் ஞானத்தை நீரோ கொடுப்பதால் உமக்கு நாரதர் என்று பேர் கிடைத்தது.

[நாரத] (சாவித்திரியைப்பார்த்து)

கண்ணே! நீ பிறந்த வீடல்லவோ சுவர்க்கம். நீ புகும் வீடானது எல்லாச் சுகங்களையும் கொடுக்கும் பரமபதம் போல விளங்கும். உன் அறிவுக்குப் புலப்படாதது என்ன இருக்கின்றது. நீங்கள் இருவர்களும் இங்கே வந்த காரணமென்ன.

[சாவி] ஐய. நீரொன்றும் அறியீரா? எனக்கு வயது முதிர்ந்தும் விவாகம் ஆகாதபடியால் என் மனம் இசைந்த ஒருநாயகனைக் கண்டு வரிப்பதற்காக எங்கள் பிதாவின் உத்திரவுப்படி தேசந்தோறும் சுற்றினேம்.

[நாரத] நாயகனை எந்தக்கடையில் வாங்கலாமென்று நினைத்தாய். நீ செல்லும் வழி மிகவும் புதிதாயிருக்கின்றதே. இருக்கட்டும். நாயகன் அகப்பட்டானா.

[சாவி] நேற்று இரவில்தான் (லச்சையுடன்) நீதிமதி, நீ சொல்.

[நாரத] குழந்தாய் என்ன காரணத்தினால் லச்சைப்படுகின்றாய். நாயகனை வாங்கியாய்விட்டதோ.

[நீதி] திரிகாலக்ஞானியாகிய பகவானே. நாங்களுனைத்தா உமக்குத்தெரியவேண்டும். நர்மதாதீரத்தில் சால்வதேசாதிபதியான துமதசேனராஜன் தபசுசெய்து கொண்டிருக்கின்றார்.

[நாரத] தெரியும். கண்ணில்லாதவன். அவன் மனைவிக்கும் கண் தெரியாது. அவனிடத்தில் உங்களுக்கென்ன காரியம்.

(நீதி) சுவாமி! அவருக்கு சத்தியவானென்று ஒரு குமாரனிருக்கின்றான்.

(நாரத) ஆமாம். அதிர்ஷ்டமற்ற ஒரு சிறுவனிருக்கின்றான். அவன் ஒன்றுக்கும் உதவாதவன். அவனைப்பற்றி நமக்கு என்ன பேச்சு வேண்டியிருக்கின்றது? நீங்கள் இங்கே என்ன காரணத்தினால் வந்தீர்கள்?

(நீதி) அந்தச் சத்தியவானை தனக்கு இனிய கணவனென்று என் சகி தன் மனத்தில் பாவித்ததாக எண்ணுகிறேன்.

சகி! சாவித்திரி! நான் சொன்னது உண்மைதானா!

(நாரத) (தலையிலும் வாயிலும் அடித்துக்கொண்டு)

துஷ்டப்பெண்களே. என்னுடைய முக்கிய சிஷ்யனாகிய அசுவபதியின் குடியைக்கெடுத்தீர்களே. பெண்கள் படிப்பு எந்தக்காரியத்துக்கு உதவும். கூத்தாடிச்சிலம்பும் படவெட்டுக்கிசையுமா. துமதசேனன் இராஜிய பிரஷ்டன். தரித்திரம் நிறைந்தவன். அவன் வீடு முழுமையும் குருடு. இருந்திருந்து உண்ணச்சோறில்லாதவன் வீட்டில் ஒருவன் பெண்ணைக் கொடுப்பானா. சாபத்தால் கெட்டகுடியல்லவோ அவன் குடி. சீ! சீ! அந்தக்கலியாணம் வேண்டாம். செல்வம் நிறைந்த மன்னவர்கள் எத்தனைபேர்களோ இருக்கின்றார்கள். சாவித்திரி. என்ன பிழை செய்துவிட்டாய். சத்தியவானை நினையாதே. வேண்டாம்.

விருத்தம்.

கண்பயந்திடு நூல்பல கற்பினும்
மண்ணிலாரறி வாரொடு வாழினும்
விண்ணினோர்குடி மீது பிறக்கினும்
பெண்மதிக்குயர் பேதைமை திண்ணமே.

(சாவி) (கண்ணீர்விட்டு)

(மனத்துள்) நான் ஒரு பிழையும் செய்யவில்லையே.

நாயகனுக்கு வேண்டிய குணங்கள்.

| | | |
|---|---|---|
| (1) | சௌரியம் | அது நிறைந்திருக்கின்றது. |
| (2) | நற்குலம் | மேலான கீர்த்திபெற்ற துமதசேன ராஜன் மகன். |
| (3) | அழகு | என் கண்கள் பொய் சொல்லுமா. |
| (4) | கல்வி | அவன் கல்லாதது ஒன்றிருக்குமா. |
| (5) | பெண்டீர்கள் வியக்கமொழிதல் | அவன் சொல்லை வியக்காதவள் பெண்ணுவளா. அவள் கல்லாயிருக்கவேண்டும். |
| (6) | சம்பத்து | அவன் குணங்களல்லவோ மேலான சம்பத்து. |
| (7) | இராசிக்கியம் | அவனிடத்தில் இராசிக்கியமில்லாவிடில் உலகத்தில் இரசங்களுமில்லை. |

[பிரகாச] எங்குலதெய்வமே. எதுக்கு எங்கள் மேல் பிழையுரைக்கவேண்டும். நாங்கள் பிழையே செய்தாலும் அது பிழையாய் முடியாது நேர்மையாய் விளையும்படி நீர் செய்யமுடியாதா.

[நாரத] நீதிமதி. அவள் தெரியாத குழந்தை. அவள் பிழைசெய்தாலும் நீ அதைத்தடுக்காமல் அதற்கு நீ ஒற்றுமையாயிருந்தது பெரும் பிழை. அஷ்ட ஐசுவரியமும் நிறைந்த அசுவபதிக்கு வறுமையே பெருமையாகவுடைய சத்தியவான் தகுதியான மருமகன் ஆவனு.

(நீதி).

(தனித்து) சகி. இனி நாம் என்ன செய்யலாம்.

முனிவர் இப்படி உரைக்கின்றாரே.

[சாவி] சகி! அவர் அப்படித்தான் பேசுவர்.

அவர் மனம் கருணையாலமைந்தது.

[பிரகாசம்] சுவாமி.

வெண்பா.

வாய்மையே செல்வம் மனஉறுதி யேவீரம்
தூய்மையே நற்றவமாய்ச் சூழுயிர் மேல் நேய்மையுளங்
கொண்டு மகி ழுமபெரிய கோமகனுக் குத்திருவும்
தொண்டுபுரி யாளோ சொலும்,

(நார) பெண்ணே. உன்மேல் என்ன குற்றமிருக்கின்றது. சிறுவயதில் மிகுதியாய்ப் படித்தோமென்கிற செருக்கு குறைவில்லாதிருந்தபடியால் இவ்வாறு கெடுதியை விளைத்தது. ஐயோ! அசுவபதி இதைக்கேட்டால் உயிர்தரிக்கானே.

[சாவி] சுவாமி. நான் செய்தது பிழையன்றே. நான் குறித்த நாயகன் உயிர்பெருகியிருப்பானுகில் அதுவே எனக்கு அளவில்லாத சம்பத்து.

(நார) (தலையில் அடித்துக்கொண்டு) ஐயோ! எது பிரதானமோ அதுதான் அவனிடத்திலில்லை. அவன் அற்ப ஆயுளுடையவனுயிற்றே. அவன் இன்று முதல் பதினேரு மாதம் பதினேரு நாள் பதினேரு நாழிகை மட்டுந்தான் உயிர்தரித்திருப்பான்.

(சாவி) [நீதிமதியைக் கட்டிக்கொண்டு]

[தனித்து] சகி. எல்லாம் தெய்வத்தின் செயல்.

[கண்ணால் ஜலம் விடுவள்]

நமது கருமத்தை நாமே அனுபவிக்கவேண்டியது. உலகத்தில் பிறக்கும்போதே அந்தகனாகவும் ஊமையாகவும் கால்முதலிய அங்கம் ஒழிந்தவர்களாகவுமிருக்கிறவர்கள் என்னசெய்கின்றார்கள். கருமத்தால் விளையும் சுகதுக்கங்களை அனுபவித்தல் கடமையென்று ஜன்மத்தைக்குற்றமின்றிக் கழித்தாலல்லவோ நாம்முன்பு செய்து குவித்திருக்கும் கருமங்கள் குறையும். இல்லாவிடில் ஓடுவோரைத்துரத்தும் சுவானம்போலவும் பயந்தோர்களை வருத்தும் பேய்போலவும் பின்னிடுவோர்களைக் கருமமானது மிகவு மிரக்கமின்றி சோகச் செய்யும். ஆகையால் நான் ஒன்றுக்கும் அஞ்சேன்.

[நாரத] பெண்களே! என்ன இரகசியம்பேசுகின்றீர்கள் இப்படிப்பேசித்தானே கேடு விளைத்துக்கொண்டீர்கள். சாவித்திரி! சத்தியவானை மறந்துவிட்டாயல்லவா. வேறு ஒரு பாக்கியவானைவிவாகம் செய்துகொள்.

[சாவி] ஐய! நான்பிறக்கும்பொழுதே என் அங்கங்களும் பிறந்தனபோல் என் நாயகனும் பிறந்திருக்கின்றான்.

வெண்பா

திங்கள் கதிர்மாறித் தெற்குவடக் கேகிடினும்
வங்கிசத்தி லேபிறந்த மாதொருத்தி—எங்கெனினும்
சிந்தைகொள் நாயகனைச் சேராது பின்னொருவன்
பந்தமதைத் தானினைப் பாளா.

சுவாமி. இனி என் மனம் மாறமாட்டாது. வருவதெல்லாம் என் வினையின் பயன் ஆதலால் அதற்கு வருந்தலேன்.

[நீதி] ஐய! கருணைக்கடலே! அந்த சத்தியவான் ஆயுள் நிறையாதவனே. ஐயோ. என்ன துன்பம் விளைந்தது. ஐயோ. என்னைப்போல் ஒருபயனுமற்றவர்களுடைய உயிர்களெல்லாம் சேர்ந்து அவனிடத்திலிருக்கலாமே.

வெண்பா.

வீரம் பொறுமை மெய்யறிவு நற்சீலம்
மாரன் வியக்கும் வடிவெல்லாம்—சேரப்
பொருந்து மெழில் மன்னன் பூணு வுயிர்கள்
இருந்தென்ன போயென்னவே.

சுவாமி. என் சகிக்கு ஒரு குறையும் நேராதிருக்கும்படி நீர் செய்தருளவேண்டும். உமது மலர்ப்பதங்களே எங்களுக்குத்துணை.

என்று நாரதருடைய காலில் விழுகின்றான்.

[சாவி] என் குலதெய்வமே.

[விருத்தம்].

உற்றவென் கணவன் போய்நான் உயிர்தரித் திடுவதென்று
பறறிடு மெனது கற்பும் பகருநன் முறையு முன்பால்
பெற்றிடு வரமும் என்னைப் பேணிடா வாவென் னெஞ்சம்
அற்றிடா தருள்வாய் அன்பற் கழுதென விசையுந் தேவே.

[நார] இந்தக்குழந்தை தர்மமே உருவாக அமைந்தவள். (மனத்துள்) அடா. இவளுக்கு வைதவ்வியம் வருமாயின் துர்க்கை, லட்சுமி, சரசுவதி, என்னும் இம்மூவர்களுடைய மங்கல்லியத்துக்கும் அல்லவோ குறைவுவரும். இவளுடைய ஞானத்துக்கும் மன உறுதிக்கும் எந்தத் தெய்வமும் அஞ்சுமெனில் இவளை அமங்கல்லியமென்பது எப்படி அனுகும்,

[கண்ணில் ஆனந்தபாஷ்பங்களுடன்.]
[சாவித்திரியைக் கட்டிக்கொண்டு]

"புனிதனைத் தழுவில் நூறு புதல்வரொத்திடுவளோர் பெண்"

என்னும் வசனப்படி உத்தமனான நாயகனை அடையும் உன்னால் கிடைக்கும் பெருமை அசுவபதிக்கு ஆயிரம்புதல்வர்களாலும் கிடைக்கமாட்டாது. நான் ஒரு மந்திரத்தை உனக்கு உபதேசம் செய்கின்றேன். உன் கணவனுக்கு மரணமென்னும் விபத்தானது நேருவதற்கு மூன்று நாட்களுக்கு முன் முதல் உபவாசத்துடன் அந்த மந்திரத்தை ஜபித்துவருவாயாகில்,

(சாவித்திரியைத் திருக்கண்ணால் பார்த்து)

உன் கணவனுயிர் பெற்று வாழ்வன். அந்த மந்திரத்தின் பெருமை யாதெனில்.

(விருத்தம்)

வேதம் உண்டு விரிந்த இப்பூமியோ
டோதம் உண்டதை யுன்னுவர் முன்செயும்
கோதெலாமகன் றேசுகங் கொண்டிட
மோத மீய்ந்திடு மூவெழுத் தாமதே.

(சாவித்திரியைத் தடவிக்கொடுத்து)

(மனத்துள்) (விருத்தம்)

நீதியே யுருவாய் வந்த நின்னருங் கணவன் றன்னைத்
தீதெது மணுகா தந்தத் தென்புலத் தமரர் கோனும்
சாதகத் துடனே யீவன் சாலவும் பலவாம் பேறு,
மாதருந் ததிபோல் நாளும் வாழ்ந்திடாய் மடவார் கண்ணே.

(அவள் காதில் உபதேசம் செய்கின்றார்)

(பிரகாசம்) பெண்களே. நீங்கள் சீக்கிரமாக உங்கள் நகரம் போய்ச்சேருங்கள்,

(சாவி) [வணங்கி] ஐய. எங்களுக்கு விடை யீந்தருள வேண்டும்.

(நார) நல்லது கண்மணிகளே.

(எல்லாரும் மறைதல்)

இரண்டாவது அங்கம் முடிவு.



# மூன்றாவது அங்கம்.

அசுவபதி ராஜன் தோன்றல்.

(அசுவ) (மனதுகுள்) என் குழந்தையாகிய சாவித்திரி இந்நாடுவிட்டுச்சென்று வெகுகாலமாகியும் இன்னம் வரவில்லை.

விருத்தம்

புகையுமென் னிதயம் வாட்டும் புண்மிகுந்திடலான் மற்றோர்
பகருநன் மொழியென் காதிற்படுவது மிலையென்னெஞ்சம்
தகுதியாம் பொருளிளந்தோர்தம் மனம்பொருதும்கொ
ஞ்சும்
சுகமகல்பஞ்சரம் போல்தோன்றுமென்பவன மெல்லாம்.

(சேவகன் தோன்றல்)

(சேவ) சந்திரமதி. அடியேன் வந்தனம்.

(அசுவ) சேவக. என்ன விசேஷம். அந்தப்புரவாசலில் உனக்குள்ள வேலைகளைவிட்டு நீ இங்குவரக் காரணமென்ன.

(சேவ) நமது உயிர்க்குயிராகிய சாவித்திரியும் நீதிமதியும் மற்றவர்களும் சுகமாய் வந்துவிட்டார்கள். அந்த சந்தோஷத்தினால் மகாராணியவர்கள் நமது குலதெய்வமாகிய உமாதேவிக்கு பூசைசெய்து வணங்கினாள். அந்தப்பூசையின் பிரசாதமாகிய மலர்களையும் கனியையும் உங்கள் கையிற்கொடுக்கும்படி மகாராணியவர்கள் எனக்குக் கட்டளையிட்டார்கள்.

(மலர்களையும் கனியையும் அரசன் கையில் கொடுக்கிறான்)

(அசுவ) சேவக. மெத்தவும் சந்தோஷமாயிற்று.

(மனத்துள்) குழந்தையைப் பார்க்க மிகவும்ஆவல் எனக்கு உண்டாகிறது. நான் அந்தப்புரத்துக்குப் போகின்றேன்.

(மறைதல்)

(சேவகன்) (தானாகப்புலம்பல்) இந்த அந்தப்புரத்துச் சேவக வேலை இனிமேல் எனக்கு உதவாது.

எல்லாரும் ஒரே விதமாக புத்திமாறு ட்டம் உடையவர்களாகவிருக்கிறார்கள். அரண்மனை யென்றால் விநோதங்கள் விசித்திரமான செய்கைகள் ஏதாவது இருக்கும். இந்த அரண்மனையில் ஒன்றும்கிடையாது. எல்லாரும்உண்மையைப்பேசுகின்றார்கள். அதிலென்ன விநோதமிருக்கிறது. மற்ற அந்தப்புரத்தி லிருக்கும் வேலைக்காரர்களுக்கு ஒவ்வொரு சமயங்களில் ஏதாவது சுகம் கிடைக்கும். இந்த அந்தப்புரத்தில் மாதர்களெல்லாம் ரிஷிகள் போல் வேதாந்தம் கற்றிருக்கின்றார்கள். நமக்கு என்ன கிடைக்கப் போகிறது. இரும்புப் பட்டரையில் ஈக்கு என்னவேலை. பிராணிகளை வதைக்கக் கூடாதென்று எவனோ ஏட்டில் எழுதினானாம். அதனால் எங்கள் அரசன் வேட்டைக்குப் போகிறதில்லை. அரசனென்றால் பற்பல மனைவிகளையும் எண்ணிறந்த போக மாதர்களையும் சேர்ந்து சுகமாயிருப்பான். எங்களரசன் கையாலாகாதவன் போல் ஏக பத்தினி விரதத்தை அனுசரிக்கின்றான். அதெல்லாம் போகட்டும். புத்திசாலியாகிய சாவித்திரியையும் இந்தப்பேதைமை விடவில்லை. சீமையெங்கும் சுற்றிக் கடைசியாய் வீடின்றி வனத்தில் பொழுது போக்கும் ஒரு தரித்திரனை அவள் கணவனாக வரித்து வந்திருக்கிறாள். பெட்டியோடு களவு கொடுத்தவன் திறவுகோல் தன் கைவசமிருக்கிறதென்று தேற்றம் கொண்டாற்போல் படுக்கவிடமில்லாத பரதேசியை மணம்புரிந்தா

னும் ஏதோ பதிவிரதம் என்பது வந்து எல்லாரையும் காப்பாற்றிவிடுமென்று அந்தக் குழந்தை சொல்லுகிறாள். அது புதுமையில்லை. உலகத்தின் அனுபவம் கண்ட கிழவியாகிய அந்த மகாராணியும் அப்படிச் சொல்லுகின்றாளே. அரண்மனையில் எந்தப்பக்கம் போனாலும் தெய்வம், சத்தியம், கருமம், புண்ணியம், தவம், இந்த வார்த்தைகள்தானா. மடங்களில் சேவகனாகஇருந்தாலும் ஏதாவது விநோதங்களை நான் பார்க்கலாம். இந்த நகரத்தில் ஒவ்வொரு மாதும் அவளுடைய நாயகன் முகமின்றி மற்றொருவன் முகத்தையும் பார்க்கிறதில்லையென்றால் இங்கே என்ன விநோதமிருக்கும்.

[நீதிமதி தோன்றல்]

(நீதி) சேவக. நீ என்ன இங்கே புலம்பிக்கொண்டிருக்கிறாய்?

(சேவ) அம்ம. நீ என்ன இலகுவானவளா. நீ எல்லாம் படித்தவளல்லவா. அரண்மனை முழுவதும் வைதிகப்பிண்டங்களாகக் கூடியிருக்கின்றீர்கள். யாரோ இரண்டு மூன்றுபேர் கரடிகள் போல வந்துவிட்டுப் போகின்றார்களே. அந்த அழகர்கள் யார்?

(நீதி) அட! முதலில் வந்துவிட்டுப் போனது அளவில்லாத தபோமகிமையுடைய ஆத்திரேய மகாரிஷி. அவர் எல்லா உலகங்களையும் ஒருநொடியிற் சுற்றிவரக்கூடிய மகிமையுடையவர்.

(சேவ) அப்படியானால் அவர் பெரிய சிலம்பக்காரர்தான். மற்றவர்கள் யார்.

(நீதி) நீ ஒன்றும் தெரியாத முரடன். தபோதனர்களை இகழ்ச்சியாய்ப் பேசாதே. மற்ற இருவர்களில் ஒருவர் சகல தர்மங்களுக்கும் விதாயககர்த்தாவாகிய பராசரமகா முனிவர் மற்றொருவர் கிருபாசமுத்திரமும் நமது அரசனுக்கு ஆசாரி

யனுமான கௌதம மகாரிஷி.

[சேவ] அவர்களுக்கு இங்கே என்ன காரியம். நமது அரசனையும் தங்களைப்போல பரதேசியாக்குவதற்காக வந்து கொண்டிருக்கிறார்களென்று நினைக்கிறேன்.

(நீதி) நீ மிகவும் புத்தியற்றவன். கோடிகாலம் தவம் செய்தாலும் அவர்கள் தரிசனம் கிடைக்குமா.

(சேவ) நான் ஒரு தவமும் செய்யவில்லையே. தினந்தோறும் நான் அவர்களைத்தவிர எந்த அழகான முகத்தைப் பார்த்தேன்.

(நீதி) அடா. நீ தவம் செய்யாவிட்டாலும் நமது அரசனுடைய புண்ணியத்தின் பலன் அவனை அண்டினவனாகிய உனக்கும் கிடைக்கின்றது. தெய்வந்தொழல், பெரியோர் தரிசனம், நீதிவழுவாமை, என்னும் மூன்று தருமங்களும் அரசர்களுக்குப்பெரிதான பலம் அல்லவா.

[சேவ] எனக்கு ஒன்றும் கேட்கப் பிடிக்கவில்லை. போதும் போதும். நான் அந்தப்புர வாசலுக்குப் போகின்றேன்.

[மறைதல்]

(நீதி) [மனத்துள்] முக்காலமுமறிந்த நாரத மகாமுனிவருடைய கருணையால் என் சகிக்கு எல்லா மங்களங்களும் உள்ளங்கைக் கனிபோல சுவாதீனமாயிருக்கின்றன. அரசனும் அவன் மனைவியும் வருத்தமடையாவண்ணம் சத்தியவானுக்கு ஆயுள் குறைந்ததென்று அவர்களிடத்தில் நானும் சாவித்திரியும் சொல்லவில்லை. நாரதருடைய வரத்தால் சத்தியவான் தீர்க்கமான உயிர் பொருந்தியிருப்பான். ஆகையால் அவர்களுக்கு மனவருத்தம் கொடுக்கக்கூடிய சங்கதியை அவர்களுக்குச் சொல்லவேண்டுவதில்லை. சீக்கிரமாக சாவித்திரியைச் சத்தியவானிடத்தில் கொண்டுபோய் மணம்புரிந்து கொடுக்கு

ம்படி மகாராணியவர்கள் கட்டளையிட்டு விட்டார்கள். சாவித்திரியும் சத்தியவானுகிய அந்த அழகனைக்கண்டது முதல் அவனையன்றி வேறொரு பொருளையும் எண்ணுது பரம்பொருளிலே மனத்தைநிறுத்துகிற பிரம்மத்தியானிகள்போல அவ்விடத்திலேயே தன் நினைவைச் செலுத்திக்கொண்டிருக்கின்றாள். யௌவனமானது குறைவின்றி அவளிடத்திற் பொருந்தியிருப்பதால் பூர்ண சந்திரனைக்கண்ட கடல் வெள்ளம்போல் சத்தியவானைக்கண்டது முதல் அவளுடைய மையலானது மென்மேலும் வளருகின்றது. அதனுல் அவள் எப்பொருளிலும் விருப்பமின்றி உன்மாதம் பிடித்தவள் போல எதையும் வெறுக்கின்றாள்.

(கலித்துறை)

பூவைச் சினப்ப ளொருகா லவனைப் புகன்று பின்னர்
நாவைச் சினப்பள் குயிலிசைத்தால் மிக நைந்து தங்கள்
தேவைச் சினப்பள் மதியோ னிலங்கத் தெளியு மிவ்வி
ராவைச் சினப்பள் துயிலாது சற்றுமென்னு ரணங்கே.

இவ்விதமாக அந்தக் குழந்தை வருந்துதலைக் கண்டு மகாராணியும் வருத்தப்படுகின்றாள்.

(சாவித்திரி தோன்றல்)

(சாவி) சகி! இதென்ன ஆச்சரியம். இதற்கு முன் நமது சோலையில் வளரும் குயில்கள் கூவினுல் மிகவும் காதுக்கு மதுரமாயிருக்குமே. இப்போது அவைகள் செய்யும் கூச்சலானது என் மேனியில் தாபத்தையும் என் மனத்தில் சங்கடத்தையும் உண்டுபண்ணுகின்றதே. சந்தனமும் தழல்போல் சுடுகின்றதே. சகி! சகி! ஒரு பக்கம் ஏகினுல் தென்றல் கொளுத்துகின்றது. மற்றொரு பக்கம் போனுல் மதியின் கிரணம் நெருப்புப் பொரிபோல் என் மேனியை எரிக்கின்றது.

அதோ இருக்கும் சத்தியவானை யெடுத்துச் சற்று வீசுவாயாக.

(நீதி) சகி. விசிறிக்குச் சத்தியவான் என்று நீ பேர் வைப்பது உசிதம்தான். அது உன் வெப்பத்தை நிச்சயமாய்ப் போக்கும் என்று எண்ணி அதற்கு அந்தப்பேர் கொடுத்தாய்.

(மனத்துள்) என் சகிக்கு மனத்திற்றோன்றுவதெல்லாம்சத்தியவானுடைய குணமாகவும் கண்ணுற் பார்க்கும் பொருளிலெல்லாம் அவனுடைய உருவமாகவும் அவள் வாயால் உரைப்பதெல்லாம் அவன் பேராகவும் இருக்கின்றது.

[சாவி] சகி. ஏன் எனக்கு இத்தனைவருத்தம் உண்டாயிருக்கின்றது.

(நீதி) என் கண்ணே. காவியங்கள் பலவற்றை நன்றாகப் படித்திருக்கும் புத்திசாலியாகிய உனக்கு நான் சொல்லித்தெரியவேண்டுவதுண்டோ. நீ சத்தியவானைப் பார்த்தபோதே சந்திரனைக்கண்ட குவலயம் போல் உன் யௌவனமானது முழுதும் மலர்ந்துவிட்டது. விரகம் என்பது நீ படித்தறிந்த பொருளாயினும் இப்போது தான் அதன் தன்மை இன்னதென்று நன்றாக உணர்கின்றாய்.

[சாவி] சகி. அப்படியானால் மாரன் பொல்லாதவனென்றும், மதியோனும் தென்றலும் அக்கினிமயமாயிருப்பார்களென்றும், நாம் வளர்க்கும் குயில்களும் நமக்கு விரோதிகளாகயிருக்குமென்றும், சொல்லும் நூல்களெல்லாம் உண்மையையே உரைக்கின்றன. இவைகளிலிருந்து தப்புவதற்கு வகையென்ன?

[நீதி] சகி. நான் சொல்லவேண்டுமோ. நீ நாயகனாகக் கொண்டவனுடைய மனம் இரங்குமாகில் இவைகளால் உனக்கு ஒரு வருத்தமும் விளையாது.

[சாவி] சகி, சகி, அவன் மனம் கடினமுள்ளதென்று அப்பொழுதே நான் உரைக்கவில்லையா. ஐயோ எல்லாம் ஒன்றாகச்சேர்ந்திருக்கின்றனவே.

### விருத்தம்.

வெய் மறலி பாசமதா மிரவைத் தீயால்
வெம்மதியைத் தென்றலை நோய் மிருதேள் வாலால்
துய்ய கொடுஞ் சிங்கியினால் கலகண்டத் தின்
தொண்டையை யாம் பூண்மலரைச் சுடுவெந் நீரால்
மையமராதன்று படைத்திட்ட வேதக்
கடவுளது பொல்லாத கபடம் தீமை
செய்தது போதாதாசொல்லவன் மனத்தைத்
திண்ணிய கல்லாலமூந்தச் செய்ததம்மா.

[நீதி] சகி, வருந்தாதே.

[மனது] அவள் வருத்தம் தீரப் பூக்களைக்கொய்து அவள் மேற்போடுகின்றேன்.

[பூக்களைக் கொய்து சாவித்திரியின் மேல் போடுகின்றாள்]

[சாவி] [திடுக்கிட்டு]

ஐயோ! மலர்களே! ஏனிந்த அநியாயம் செய்கின்றீர்கள்?

(கலித்துறை)

போகாது விண்டபூழி வெம்மலர் காளுமைப் பூணநிழல்
நோகாது வைத்துப் புனலூட்டி யாசையி னோடுபக்கம்
ஏகாது சிந்தை யுமையோம்பு மென்னை யெண்ணுமலெனக்
காகாத பாவியின் கைக்கணை யாகி விட்டீரவமே.

[நீதி] சகி, என்ன சொல்லுகின்றாய்.

(சாவி] நீ பார்க்கவில்லையா. இதோ என் மேலே மன்மு

தன் மலர்க்கணைகளைத் தூவுகின்றான். இம்மலர்களும் என் அன்பு மறந்து அக்கொடியவன் கையிற் கணைகளாயினவே.

[நீதி] விரகத்தின் புதுமையை என் என்று சொல்லுவேன். உன் உடல் வெப்பம் தீருவதற்காக யான் அல்லவோ மலர்களைத் தூவினேன். குற்றமற்ற மன்மதனையும் வேதனையும் மலர்களையும் ஏன் நிந்திக்கிறாய்.

[சாவி] மன்மதனும் வேதனும் குற்றமற்றவர்களா? வேதன் விரகத்தைச் சிருஷ்டித்து அவன் தம்பியாகிய மாரனுக்கு உபகாரம் செய்திருக்கிறான். ஐயோ! மன்மதனே! அங்கமிழந்த நீயும் ஒரு தலையிழந்த உன் அண்ணனும் மிகவும் நல்லவர்கள். உங்களையும் ஒருத்தி பெற்றாளல்லவா.

[கலித்துறை]

மின்னார் விரகம் படைத்திட்ட தீவினை மேலிட்டயன்
தன்னா லிழந்தன னோர்தலை யுன்குணத் தா லவிந்த
துன்னருடல் கொடும் வேளே யிதெண்ணி யுமைப் பெற்றதாய்
பொன்னா யுருகுகின்றா ளிதுவோ மக்கள் புண்ணியமே.

இதுமட்டுமா. உன் குலமே கொடியதல்லவா.

விருத்தம்

காய்பெருங் கடுவும் வெம்மதிக் கனலும் கடியவோர் தென்றலு முனக்குத்
தாய்வழி யுறவுன் றந்தைகாண் குயிலித் தாரணிமிசை தழைத்தோங்கச்
சாய்விழிக் காகந் தனையெறித் தடலா தன்றுவிட் டானவனின்ற

சேய்மலர்க் கணையாய் நின் குலத்தியல்பாந் தீமையி
துணை வெறுத் தென்னே.

(நீதி) (மனத்துள்) ஐயோ. சகி மெத்தவும்வருந்துகின்றாளே. இங்கேபூங்கொடியின் கீழே யிற்றிருப்பதால் உடலின் மேல் மலர்கள் விழும்போது மன்மதனை நிந்தித்து வெறிகொண்டவள் போல் புலம்புகின்றாள்.

(பிரகாசம்) சகி! அதோ! திறந்த வெளியில் மதியின் கிரணத்தால் அவ்விடம் சீதளமாயிருக்கின்றது. நாம் அங்கே போவோமாக.

(இருவரும் கொஞ்சம் விலகி உட்கார்ந்து)

(சாவி) [உடலில் வருத்தம் அபிநயித்து)

ஐயோ. இங்கென்ன தீப்பற்றி யெறிகின்றதா. இம் மதியும் அக்கினி தேவனும் ஒருவனே யென்று நினைக்கிறேன்.

[கலித்துறை]

அனலாகு வெம்மதி தன்னெடு கங்கை யமர்ந்ததினால்
புனலா யுருகின ளன்றெரிந் தரனப் புரத்தை யவன்
கனலா லரன்தலைச் சூடாலரும்பித் தங்கண்ட தென்ன
வினையோ யவன்திரு மேனியிற் சாம்பல் மிகுத்ததுவே.

[நீதி] ஓய் மதனக் கடவுளே. மெல்லிய இதழ்போலும் மேனியையுடைய என் சகியை வருத்தவேண்டாம். கிருபை செய்து இப்போது வருத்தாதிருக்கில் அவள் கணவனை யடைந்த பின் அவ்விருவர்களும் இடைவிடாது உம்மையே பூசித்து நீரிசைத்தவழியன்றி வேறு தெய்வத்தின் வழியிற் செல்லாதிருப்பார்கள்.

[சாவி] [லச்சை அபிநயித்து]

சகி. போதும் போதும் பரிகாசம்.

(உடலில் வெப்பத்தின் மிகுதியை அபிநயிக்கிறாள்)

(நீதி) சகி, நீ மிகுந்த தாபத்தால் வருந்துகிறாய். அது நிவர்த்தியாகும் வண்ணம் இதினால் உன் அவயவங்களைப் போர்த்துகின்றேன்.

(தாமரை இலைகளைக்கொண்டு போர்த்துகின்றாள்)

சகி. உன் உடல் ஏன் இப்படிப் பதருகின்றது.

(சாவி) ஐயோ, அந்தக் கோகிலங்களின் வாய்களைக் கட்டிவிடாயா ஓ குயில்களே, ஏன் இந்தக் கொடுமை செய்கிறீர்கள்.

(கலித்துறை)

நாடோறு மென்னொடு வாழ்ந்திருந்தே மனம்மையமதந்
னொடேயிணங்கி யிட்போதிசைக்குங் குயில்கா ளுமக்கிக்
கேடே னுயர்ந்த குடியிற் பிறக்கினும் கீழ்க்குலத்தார்
வீடோடு சேர்ந்து வளர்ந்திட்ட புல்லரின் மெய்ம்மை யிதே.

(நீதி) சகி. சாவித்திரி, ஏன் இவ்விதம் அரற்றுகின்றாய். இதோ ஆதவனுதயமாகப் போகிறான். உன் மெய்யை வருத்தும் வெப்பமானது தீர்ந்துவிடும்.

(சாவி) இக்கொடியதாகிய இரவானது கழிந்து விடியற் காலம் வருதல் எவ்வளவு சுகமாகயிருக்கின்றது.

(வெண்பா)

தண்டா மறையுஞ்சேர் சக்கிரவாகக்கொடியும்
விண்டே ரினிலமரும் வெய்யோனைக்-கண்டினிதாய்ப்
பெற்றபெரு மைக்குநிகர் பேசலாம் அன்பனைக்கண்
ணுற்றமட வார்தம் முளம்.

சகி. இருந்தாலும் மறுபடியும் இரவுவரின் என்மெய் நோவும் வருமென்று என் மனம் பதருகின்றது அதுதீர மருந்தொன்றில்லையா.

(நீதி) சகி. அம்மருந்து தெரிந்தவன் சாலவதேசாதிபதியின் குமாரன் சத்தியவான் தவிர வேறொருவருமில்லை.

[சேவகன் தோன்றல்]

[சேவ] [சாவித்திரியை வந்தனம் செய்து]

அம்மணி. நர்மதா நதிக்கரைக்குப் போக எல்லாரும் இன்று புறப்பட வேண்டுமென்று அரசனும் மகாராணியும் உத்திரவுசெய்து அநதப்படி இரதமுதலியவைகளும் ஸஜ்ஜமாயிருக்கின்றன. உடனே தாங்கள் அந்தப்புரத்துக்குவரவேண்டுமென்று மகாராணியவர்கள் உத்திரவுசெய்தார்கள்.

[சாவி] [லச்சையோடு புன்னகையுடன்]

சகி. நீயும் என்னுடன் நர்மதாதீரத்துக்கு வரவேண்டும் நான் அந்தப்புரத்துக்குட் போகின்றேன்.

(மான்களும் குயில்களும் தன் கால்களைச் சுற்றுவனபோல் அபிநயித்து.)

இவைகளைவிட்டு எவ்விதம் நான் பிரிவேன். நான் போகிறேன் என்று எப்படியோ அவைகள் தெரிந்துகொண்டனவே. என்கண்போன்ற குயில்களே இங்கே வாருங்கள்.

[அவைகளைத் தழுவி]

நீங்கள் இப்போதிருப்பது போல இரவிலு மிராமல் துஷ்டத்தனம் செய்கிறீர்களே. மான்களே இங்கேவந்து எனக்கு முத்தம் கொடுங்கள்.

[அவைகளை முத்தமிட்டு]

விருத்தம்.

நல்லி ளங்குயில் காளரி ணங்களே
அல்ல ரும்பக லுமொடு வாழ்ந்த யான்
புல்லுமென்மனை யானிடம் போகுவன்
மெல்ல வென்னை மறந்திடு வீர்களோ.

[அவைகளை அணைந்து]

நீங்களிங்கே சுகமாயிருங்கள் நான் என் கணவனிடம் போய் சீக்கிரமாக உங்களை வந்துபார்க்கிறேன்.

[அவைகள் பின்துயர மறைதல்]

நீதி)மனது என்னுயிர்க்குயிரானசாவித்திரி அவளுடையபதியின் வீட்டுக்குச் செல்லுகின்றாள். நானும் அவளுடன் சென்று அவளுடைய மணக்கோலத்தைப் பார்த்து மகிழ்ந்துவிட்டு திரும்பி

என் அகம் செல்லவேண்டும். இதுவரையில் அவளுடைய நட்பினால் அடைந்தசுகம் இனி எனக்கு எவ்வாறு கிடைக்கும். நட்பு என்னும் ஒரு அன்பானது இல்லாவிடில் உலகம் பிழைப்பதெப்படி. அந்த மேலான ஒரு உணர்வுதான் பலவிதமாக உலகத்தின்கண் பரவி சகல சராசரங்களையும் வாழ்விக்கின்றது. நட்பொன்றுதான் தெய்வத்தினிடத்தில் "அருள்" என்றும் தாயினிடத்தில் "அன்பென்றும்" தந்தையிடத்தில் "வாத்ஸல்லியமென்றும்" சகோதரர்களிடத்தில், "விசுவாசம்" என்றும் அரசனிடத்தில "பொறுமை" என்றும் குருவினிடத்தில் பட்சம் என்றும் தம்பதிகளிடத்தில் "காதல்" என்றும் பலவிதமாகப் பேர்கொண்டு எல்லா உயிர்களையும் காத்து இரட்சிக்கின்றது "நட்பு" என்னும் அபிமானத்துக்கு எதைத்தான் உவமை சொல்லலாம்.

(வெண்பா)

பெற்றோரும் கூடப்பிறந்தோரும் தெய்வமுமங்
குற்றோரும் மேலா முறவோரும்—உற்றுணரும்
கட்புலனிலா வதனக் காட்சி யெனவா மவர்கண்
நட்பது வொன் றில்லா விடில்.

(மறைதல்)

மூன்றாவது அங்கம்முடிந்தது.



# நான்காவது அங்கம்.

(சத்தியவான் புஷ்பக்குடலையுடன் தோன்றல்)

[சத்தியவான்]

(மனதுள்) [யோசனையுடன் அங்குமிங்கும் உலவி],
இது ஆச்சரியமில்லை

விருத்தம்

மாயவன் மலரோன் அந்திவண்ண னென் மூவர் நாளும்
சேயநல் வாணிதன்னும் திருவுமை யவளைத்தாங்கி

நேயமோடணைந்து நிற்கில் நிலையிலா மாதர் நெஞ்சம்
தூயபூங் கொடியர் நோக்காற்றுன்புறல் நேர்மைதானே

அன்று இரவில் அந்த மடக்கொடியைப் பார்த்தது முதல் உலகமானது புதிதாக எனக்குத் தோற்றுகின்றது. அதுவரையில் நான் என் தந்தை தாயுடைய ஏவலையே என் சிரசில் கொண்டு முடித்து அது அல்லது மற்றொன்றையும் அறியாத சிறியோனாக இருந்தேன். அவளை நோக்கினவுடன் எனது ஜன்மமானது பலவிதமான பிரயோசனங்களை யுடையதுபோலும் காணப்படுகின்றதே. அவளுடைய சௌந்தரியம் பொருந்திய பார்வையானது என் கண்முன்னே நிற்கின்றது. குயில்மொழி போன்ற அவள் சொல்லானது எனது செவிகளை விட்டு அகலவில்லை.

(ஆகாயத்தைப்பார்த்து)

அட. இன்று வெகுநேரமாகியும் இன்னம் என்றந்தையுடைய பூசைக்குவேண்டிய மலர் முதலியவைகளை நான் எடுக்கவில்லை. என்மனதானது என்ன காரணத்தினாலோ ஒரு பொருளையும் நாடாது நிற்கின்றது. இதென்ன பிரமை எனக்குவந்திருக்கிறது. எங்கும் அவள் மயமாய்த் தோற்றுகிறபடியால் ஒருமலரையும் கொய்ய என் மனது இணங்கவில்லை.

(விருத்தம்)

பூத்திடும் பதுமம் அன்னாள் பொன்முகம்பொருந்துமிங்கே
பார்த்த மல்லிகையம்மாதின் பைந்நகம் போலிலங்கும்
நேர்த்தியாங் குவளை மின்னாள் நெடிய கண்ணெனவாமெங்கும்
ஏத்திடும் கொழுந்தும் அம்மா ளிதழையொத்திருக்குமன்றே

[கொஞ்சம் மலர்கள் கொய்வதுபோல அபிநயித்து.]

இதோ, அன்னப்பேடுகளும் அவள்போல நடக்கின்றனவே.

[முன்னே பார்த்து திடுக்கிட்டு]

ஐயோ, அந்தக்கிளியானது அந்தக்கோவைக்கனியைவாயால்ப் பற்றுகின்றது. அது அவளுடைய அதரமென்று நினைத்தேன். அடா

விருத்தம்.

மையிருட் குழலுந் திகழும் நன்முறுவல் வாய்ந்தமின் முகமும் ஒப்பகலும்
பையரும் பவளக் கனியிதழ் வாயும் பகர்வன போன்றிடுந் தனமும்
நையும் நூரிடையும் சிறுமடக் களிறேப் நடையும் யாரொரு தாரம் கண்டேன்
தையல்நல் லழகைக் கண்டுமின் புறவென் தந்தைதாய்க் கிலே யரும் விழியே.

அவளுடைய நினைவால் என்க்கென்ன பயன். முடவன் கொம்புத்தேனுக் கிச்சிப்பது போல் அவள் அழகை நினைத்து நினைத்து நான் ஆசைகொள்ளுதல் மிகவும் பிழை.

(யோசித்து).

அவளை நினையாது என மனம் எப்படி யிருக்கும்-எப் பொருளிலும் செல்லாது அவளுடைய நடையிலும் உடையி லும் அவள் மொழியிலும் விழியிலும் நின்றுகொண்டு பிடிவா தம் செய்கின்றதே. அரசாட்சி செய்து பெரிதான ஐசுவரியம் நிறைந்த மன்னன் புதல்வியை காட்டிலிருந்து கிழங்கையே உண்ணுகின்ற நான் அடைய எண்ணலாமா.

அந்தப் பெண்ணின் நிலைமைக்கும் என் சிறுமைக்கும் எவ்வளவு தூரமிருக்கின்றது.

(மலர் கொய்வது போல அபிநயித்து)

என்ன இருந்தாலும் அவள் என்னை விரும்புவளா. காமம் நிறைந்த நெஞ்சிற்கு பகுத்தறிதலேது.

(கலித்துறை)

இல்லானை நாடு துறந்திட்ட வென்றனை யேதும் நன்றாய்க்
கல்லானை யிவ்வனத்தே பொழுதோட்டிக் கழிக்கு மிந்தப்

புல்லானை நாட்டின் சுகம் பெறு மாறு புல்லாதவனை
நல்லானெனக்கொள்ள வெண்ணுவளோ பெண்கள்நாயகமே

ஐயோ. இன்னம் சிறிது போது இருந்துவிட்டுப் போ வென்று என் தாய் தந்தை உரைக்கக் கூடாதா-அம்மாது சிரோமணியின் அழகை நான் நினைக்க என் மனதில் ஆனந்த வெள்ளம் பெருகுகின்றது.

(கவி)

மெள்ள நகைசெய்யம் மின்னாள் முகங்கண்டோ
ஒள்ளும் மதி தேய்ந் துடல் நாணும்-கிள்ளையதும்
அஞ்சுமவள் மொழியிற் காகா துவமை குழல்
கஞ்சமல மைப்பழித்த கண்ணினாள்-கொஞ்சுதலாய்ப்
பேச்சொன் றுரைத்தாற் பிணிதீரும் வீணையொலி
கூச்சலாய்க் காதைக் குடையாதோ-மூச்சிலெழும்
வாசனைக்குத் தாமரையும் மல்லிகையும் செண்பகமும்
தாசனெனக் கூப்புமே தங்கரத்தைப்-பேசுமுயர்
மாரன் கரும்பு மலரைந்தும் விட்டிவள்தன்
பேரதனைச் சொல்லிப் பிழைக்கலாம்-தாரிழையின்
கூந்தலுக்கு நேர் எதையுங் கூறினால் என்னறிவு
மாந்தமெனத் தூற்றாதோ வையகமும்-காந்தையிவள்
மன்ற லளகத் துதவி மன்மதனுக் குள்ளதெனில்
கொன்றை முடியோன் விதியும் கோளாறாய்-அன்றமையும்
சேய்பவளமும் கோவைச் செங்கனியும் யாமின்னாள்
வாயிதழைப் போல்வோ மென வழுத்தில் நாயமில
தூயவிதழூறும் சுவையமுதுக் காயின்னம்
மாய னவதரிக்கில் மாசில்லை-நேயமுறும்
கோதையவ ளதரம்கொண்டிட மெய்யின் மற்றோர்
பாதியையு மீசன் பயந்திடுவன்-வேதமுறை
ஒன்றன்றி மற்றொன்றும் ஓதிடா வேதனுமிம்
மனறவி தழுக்காக மாய்ந்திடுவன்-என்றுமொரு
பங்கயமும் சேலும் பசுங்குவளை யும்மூனிலும்

மங்குமிரு ளும்விடமும் மான்விழியும்-சங்கை சிறி
தில்லாதுரைப்ப ரிணையென்று கண்ணினுக்கச்
சொல்லெல்லாம் நான்சொல்லும் சொல்லல்ல அல்லைப்
பகலென்று பேசும் பழம்புலவர் சொற்குற்றம்
மிகவும் வெறும்பெனக்கும் மின்னுள்-மகிழ்வோடு
நோக்கியடல் வாள்பலரை நொந்தோரை யுந்திடமாய்
ஆக்கிவிடுவாள் நோக்கினுல்.

(சேவகன் தோன்றல்)

(சேவ) வான் மாறினும் தன் சொல் மாருத வாய்மையோ ளுகிய மத்திரதேச மன்னன் அசுவபதிராஜன் துமதசேன மகா ராஜனுடைய ஆசிரமம் நோக்கி வருகின்முன்.

(சத்தியவான்) (திடுக்கிட்டு)

(மனத்துக்குள்) ஆ, இதென்ன ஆச்சரியம். அசுவபதிராஜன் அந்தப் பூங்கொடிகயின் தந்தையல்லவா. அவனுக்கு இங்கென்ன காரியம்-ஒரு கால் நான் விரும்பினதையும் தெய்வம் கைகூட்டி வைக்கின்றதோ.

(அசுவபதி மகாராஜனும் சாவித்திரியும்நீதிமதியும் தோன்றல்)

(அசுவபதி) அடா, இவ்வனத்தில் நுழைந்தவுடன் அருந் தவம்புரிகின்ற பெரியோர்களின் பெருமையால் நகரத்தின் மீதில்லாத மனமகிழ்ச்சி உண்டாகின்றதே-தவம் நிறைந்தோர் களின் மாட்சிமைக்கு எது நிகராகும்.

(விருத்தம்).

ஞால மூன்று மகற்றுவர் நாட்டுவர்
காலனைக் கருதாது சினப்பரிவ்
வேலைதீர அருந்துவர் விந்தையாய்ச்
சீலமாதவஞ் செய்யு மனத்தரே.

(சத்தியவானைப் பார்த்து)

இப்புதல்வன் யார்-இவ்வழகனைப் பெற்ற புனிதர்கள் யார் சர்வலட்சணம் பொருந்தி இராஜகுமாரன் போல் விளங்குகின்றானே.

(ஆச்சரியம் அபிநயித்து)

விருத்தம்.

மாரனை யுடல் பெற்றிவனுனதா
சூரனைப் பகைதூய நல்வேலனு
சீரமைந்திடு வற்கலம் பூணுமித்
தீரன் மாசுறு திங்களும் போல்வனே.

(சத்தி) (மனது) காலம் மிகவும் சென்றுவிட்டது. கருணாநிதியாகிய வென்றந்தை பூசைபுரியத் தொடங்கும் சமயமும் நெருங்கிவிட்டதே. அந்தப்பெண்ணை நினைத்துக்கொண்டு என் காரியத்தை மறந்து நின்றேன்-எடுத்த மலர்கள் போதும். காலதாமச மில்லாமல் ஆசிரமம் செல்லவேண்டும்.

(கொஞ்சதூரம் சென்று மறுபடியும் திரும்பிப்பார்த்து)

(மனது) இவர்கள் வந்த காரணமின்னதென்று அறிய வேண்டாமா. அந்த மடவன்னத்தைப் பெற்றெடுத்த பெருமானைக் கண்ணுல்பார்ப்பதும் ஆனந்தமல்லவோ.

(சாவித்திரியையும் நீதிமதியையும் பார்த்து)

என் கண்ங்களே. நீங்கள் காட்டுதல் மெய்தானு அந்தமாதை விட்டு இனி அகல்வீர்களோ.

(நீதிமதி) அசுவபதியை நோக்கி

எந்தந்தையே, நமது முன்னுகவிருப்பதுதான் துமதசேன ராஜனுடைய ஆசிரமம் இவ்விடத்தில் யெங்குமில்லாத சாத்துவிகக்குணம் நிறைந்திருக்கின்றது.

கலித்துறை.

வாவென் றழைக்குமிக் கிள்ளைகள் நல்லுற வாயிருந்து
போவென் றுரைப்பன போற்சிற காட்டுமிப் பூங்குயில்கள்
மாவிங் கமர்ந்தனள் நம்மெதிரா ராகியிம் மான்களன்பாய்க்
கூவுஞ் சிறப்பினை நோக்கிட வேண்டும்கண் கோடிகளே.

அந்த துமதசேனராஜன் மிகவும்தருமநிறைந்த உள்ளத்தோனுகையால் அவன் வாசஞ்செய்கின்ற இந்தவனத்தில் தர்மம் மிகவும் நிறைந்திருக்கின்றது. இதோ! அந்தப் பெண்புலியானது தாயைவிட்டுப்பிரிந்த இளமானுக்கு முலைகொடுத்துப் பாலூட்டிவளர்க்கின்றது. அதோ பாரும்! மந்தியானது அந்தச் சிறிய கிளிப்பிள்ளை மேனியில் வெயில் படாதவண்ணம் இலைகளால் மறைத்துக்கொண்டு நிற்கின்றது.

(சத்தியவானைப்பார்த்து)

ஐயா, என் அண்ணலே! கும்பிடப்போன தெய்வம் குறுக்கிட்டதுபோல அரசன் மகனுகிய சத்தியவானை நமது வழியிலேயே பார்த்துவிட்டோம். இவர்தான் அந்தமகாநுபாவன். இவர்தான் நமது சாவித்திரியுடைய கௌர்வத்தைப் பாதுகாத்தவர். இவருடைய அழகையும் சௌரியத்தையுங் கண்டுதான் நமது சாவித்திரியானவள் முதலில் மையலின்னதென்று உணர்கின்ருள்.

விருத்தம்.

அன்ன மற்றனள் நங்குயி லாசையோ
டின்ன வன்குண மெய்யெழி லெண்ணலால்
மன்னு திங்க ளெரித்திட வாட்டியே
தின்னு மேயவ ளைச்சிறு தென்றலே.

(அசுவ) நீதிமதி. அளவற்ற ராஜபோகத்துக்குச்சாதனமான அவயவ ரூபலாவண்ணியமும் பிரகாசமுள்ள ஞைதிக ஸ்ரீ நிறைந்த சிந்தையும் அவனிடத்தில் விளங்குகின்றனவே.

இந்தக்கோமகனைத்தானு நமது கண்மணியாகிய சாவித்திரி கணவனாக வரித்தாள். என் குலமானது இன்றே என்றும் பெறாத சிறப்பையடைந்தது. என்னுடைய பிதிர் தேவதைகளும் ஒய்வில்லாத சந்தோஷத்தையடைந்தார்கள். என் கண்களும் அவைகளுண்டானதற்குப் பயன்பெற்றன.

விருத்தம்.

கனைத்திடு மேகந் தன்னைக் கண்ணுறுந் தோகை யொக்க
வனப்புறு மதியங் கண்டே மலருநற் குவளை யொக்கக்
கனத்தபொன் புதையல் வாய்ந்த மிடியர்தங் கருத்தை யொக்க
மனக்குறை யொழிந்தே னின்னோன் மலர்முகங் கண்டபோதே

(சத்தியவானைநோக்கி)

ஐயா, துமதசேன ராசனுடைய கண்ணினுக்குக் கண்ணே! எங்கும் நிறைந்த சர்வேசுவரனுடைய அருள் பெற்று நீடூழிவாழ்வாயாக.

(அவன்கையிலிருந்த குடலையின் மலர்கண்டு)

அழகெல்லாம் ஒன்றாக நிறைந்த சமுத்திரமே, அறிவினால் பிரமனையும், அருளினால் கேசவனையும், விக்ஞானத்தினால் சம்புவையும் ஒப்பாக உடைய நீயும் எந்தத் தெய்வத்தைப் பூசிக்கின்றாய். எதற்காக இந்த மலர்களைக்கொய்து மலரினும் மிருதுவான உன்கையாலிக்குடலையைத்தாங்குகின்றாய்.

விருத்தம்.

மாசகல் குமரன் போல வனப்பெலாம் மருவி மேலாம்
நேசமோ டருளு மன்பும் நியமமும் பெருகும் நீதான்
வாசியாய் ப்புரியும் பூசை யின்னதென் றறியேன் மைந்த
பூசைநீ புரியப் பூசை புரிந்திடும் பூசையென்னும்.

[நீதிமதி] மன்னவன்மைந்தனுகிய மகாரிஷியே நானும் என்சகியாகிய சாவித்திரியும் உம்முடைய தாய்தந்தைகளாகிய புனிதர்களுக்கு வந்தனம் செய்கின்றோம்.

(சத்தி) (மனத்துள்). சந்திரிகைக்கு முன்னாக விளங்கிவரும் சந்தியைப்போல இம்மாது என்மனத்துக் குமுதம் போன்ற கண்மணியை அழைத்து வந்திருக்கின்றாள். பெண்ணரசே, நீ இது செய்ததற்காக உன் தாய்தந்தைகளுக்கு இதோ கோடி தண்டம் சமர்ப்பிக்கின்றேன்.

(பிரகாசம்) மலர்மங்கைபோன்றமின்னார்களே. அன்று முதற் சுகமாக இருக்கின்றீர்களா பார்வதியைப் பெற்ற இமயவன் போல உன் சகியாகிய சாவித்திரியைப் புதல்வியாகக் கொண்ட மன்னர் மன்னவன் இப்பாக்கியவான்தானா.

(அசுவபதியைநோக்கி)

ஐய, உமக்கு வந்தனம், அரசர்களுக்கெல்லாம் திலகம் போன்ற பெருமானே நீர் எவருக்கருள்புரிய இவ்வனத்துக்கு வந்தீர்.

விருத்தம்.

தங்கு நற்றர ளந்தனை வாரியே
துங்க மாம்புன லோடைகள் தூற்றிடத்
தெங்கு சேர்ந்திடு முன்றிரு நாடுவிட்
டிங்கு நீவர வென்றவம் செய்தனம்.

(அசுவ) கேளும், தூய்மைநிறைந்த எழிற்கடலே! எனதருமைப்புதல்வியாகியசாவித்திரி, உம்மை, இகத்துக்கும் பரத்துக்கும் உதவியான கணவனாக வரித்தாள். அவள் உமது பொருளாகையால் உம்மிடத்தில் அவளை ஒப்புவிக்கவந்தேன். அவளை நீர் அன்புகூர்ந்து கைக்கொள்ளவேண்டும்.

(சத்திய)

(புளகம் அபிநயித்துமூக்கின்மேல் விரல்வைத்து,)

இதென்ன ஆச்சரியம். அகண்டமண்டலாதிபதியாகிய உமது கண்மணியை, ஒன்றுமில்லாது வனத்தில் தவம்புரியும் நான் மனைவியாகக்கொள்ளுதல் நீதியா? நான் அவளை மணம்

செய்தால் உலகம்முழுவதும் நகையாதா? கண்ணில்லாத தாய் தந்தைகளுக்குப் பணிவிடைசெய்வதுதவிர வேறொரு செயலையும் அறியாத நான் அரசன்மகளை விவாகம்செய்யலாமா? சுகமனைத்தும் துறந்த எனக்கு உமது மகள் எப்படிப்பொருந்துவள்?

விருத்தம்.

மெல்லிய மலரிற் சீரா மேனிய ளுமது செல்வி
புல்லினி லமர்ந்து நாளும் புரிந்திடுந் தவமுளான் யான் [ர்க்
எல்லையி லிவள்தன் சிந்தைக் கிசைவறோ வெளியேன் கேட்போ
இல்லையென் றுரையா திட்டே இசைபெருக் கியபூ மன்னு

நானிருப்பது காடு, நானுண்ணுதல் காய் கிழங்கு. தந்தை தாய்க்குப் பணிவிடை செய்து சுகம் முழுவதையும் வெறுத்த துறவியா யிருக்கின்றேன். சுகத்திலே பிறந்து சுகத்திலே வளர்ந்துவரும் உமது புதல்விக்கு நான் உசிதமான நாயகனல்லேன். நாங்கள் தம்பதியாகயிருக்கில் அவளுக்கும் சுகமில்லை. அவளை விவாகம் செய்வது எனக்கும் நியாயஅன்று. அரசனே, இனி நீர் அவ்விதமான எண்ணம் கொள்ளல்வேண்டாம்.

(சாவி) (மனத்துள்) என் சுகமே உருவாக அமைந்த எழிற்கடலே, எனக்கு உம்மையன்றி வேறு என்ன சுகமிருக்கின்றது. ஒருகால் நீர் என்னைக் கைக்கொள்ளாவிடில் என் உடலை விட்டு விடுவதும் ஒரு சுகம்தான்.

(நீதி) (தனித்து) சகி, என்னவிருந்தாலும்புருஷர்களுடைய கபடம் அளவற்றது. இந்தச் சத்தியவான் எவ்வளவு வைராக்கியத்தோடு பேசுகின்றார். உன்னையவரன்று பார்த்தது முதல் அவருடலானது உன் நினைவையே உணவாகக்கொண்டு வளர்ந்தமையால் உன்போலும் இளைத்திருக்கின்றது. உன் கீர்த்தியையே அவன் நினைந்திருப்பதால் அதுபோல அவன் முகம் வெளுத்திருக்கின்றது. உன்னிலைவா விவருறங்களில்லையென்று அவன் கண்கள் புகலுகின்றனவே.

(அசுவ) மைந்த, நீ அப்படி யுரைப்பது நீதியன்று. உன் நினையென்னும் உறுதியால் என் புதல்வி உயிர்தரித்திருக்கின்றாள் உன்னையும் உன் குணங்களையுமன்றி வேறொரு பொருளையும் அவள் மதியாள். சுகமென்பது இத்தன்மை யுடையதென்று என்புதல்வி நன்றாக அறிந்தவள்.

விருத்தம்.

பற்று நல்லர சாட்சியும் பான்மையோ
டுற்ற மாதரு மோம்பிடு செல்வமும்
மற்று மாளிகை யுஞ்சம மாகுமா
நற்ற வத்திரு வுக்கு நவின்றிடாய்.

அன்பே யுருவாக வமைந்த செல்வனே, என் புதல்வியை இப்போதே உமது கையில் ஒப்புவிக்கின்றேன். நீயவளை மணந்து இவ்வுலகின்கண் புரந்தரனும் சசிதேவியும்போல நீங்கள் வாழ்வீர்களாக.

(சத்தி) ஐய, நானினி என்ன சொல்லத்தக்கது. நான் ஒன்றுமறியாத சிறுவன்.

விருத்தம்.

வந்திடும் அமுதம் வேண்டா தொழித்திடும் மதிய ருண்டோ
அந்தமா யணுகும் பூமா தகன்றிட வுதைப்பா ருண்டோ
சிந்தையிற் கினிய ளாம்நின் செல்வியை யேற்க வென்றன்
தந்தை தாயிசைவ ரென்கில் தமியனுக் கதுமே லாமே.

(அசுவ) மைந்த, நீ உரைத்தது மிகவும் குணமாயிருக்கின்றது.

(சத்தி) ஐய, சமீபத்தில்தான் என் தாய்தந்தையுடைய ஆசிரமமிருக்கின்றது. நீர் அங்குவந்து எங்களுடையபூசையைப் பெற்றுக்கொண்டு பிறகு உம்முடைய மன அபீஷ்டத்தை அவர்களிடத்திற் சொல்லலாம். அவர்கள் அதை அங்கீகரிப்பராகில் நீர் இப்போது சொன்ன மொழியை என் சிரசால்

வகித்து நடக்கின்றேன். நீரும் உமது புதல்வியரும் எங்கள் ஆசிரமத்துக்குச் செல்ல எழுந்தருளல்வேண்டும்.

(அசுவ) மைந்த, அப்படியே செய்வோம்.

[எல்லாரும் மறைதல்].

நாலாவது அங்கம் முடிவு.



நாலாவது ஐந்தாவது அங்கங்களுக்கு மத்தியில் பிரவேசகம்.

(கத்துரு என்னும் அப்ஸரஸ்திரி தோன்றுதல்).

[கத்துரு] (மனத்துள்) தேவர் கோனாகிய இந்திரனுடைய ஆக்ஞைப்படி சாவித்திரியுடைய கல்யாண காலத்தில் அவளுக்கும் அவளுடைய நாயகனுக்கும் மலர்மழை சொரிந்து ஆசீர்வதிப்பதற்காக எனது அன்பனாகிய விநதசேனன் இப்பூவுலகுக்கு வந்தார். அப்படி வந்து பத்து தினங்களாகியும் அவரின்னம் திரும்பிவரவில்லை. மதனன் புருஷனுகையால் புருஷர்களை வருத்தாமல் மாதர்கள் மேலே மட்டும் அம்புகளையெய்து பாரபட்சம் செய்கிறான். அவனை அரன்கொளுத்தியது போல் உமையவளும் ஒரு தரம் கொளுத்தினாலல்லவோ மாதர்களிடத்திலும் புருஷர்களிடத்திலும் அந்த மீனகேதனன் சமமாக நடப்பன். ஐயோ, பேதைமை நிறைந்த மாதர்கள் என்றைக்கு ஒற்றுமையாக நடக்கப்போகிறார்கள்.

(விநதசேனன் தோன்றல்).

[விநதசே] (மனத்துள்) அட அட அத்தர்மபதியின் அழகையும் அவர்களின் ஒற்றுமையையும் பார்த்துப்பார்த்து என் மனத்தில் பெருகி ஓடின ஆனந்தவெள்ளத்தில் நான் முழுகி யாவற்றையும் மறந்தேன். என் அறிவுக் கமுதம்போன்ற கத்துருவையும் மறந்தேன்.

[கத்துருவை நோக்கி].

என் கண்ணே! நானிவ்வளவு காலம் வாராதிருந்ததினால் உன் மனம் வருத்தமடைந்ததோ.

[கத்துருவைத் தழுவி].

கண்மணியே, அந்த சாவித்திரியுடைய மணக்கோலத்தைப் பார்ப்பதற்கு என்னிரண்டு கண்களும் போதாதிருந்தன.

[கத்து] நண்ப, உனக்கு நாலு கண்களுண்டே, இந்தக்கண்களும் உன்னுடையவையல்லவோ. அவைகளையும் நீ கொண்டு போயிருக்கலாமே. கல்லியாணம் முடிந்ததா? சாவித்திரியைப் பெற்றவர்களும் மற்றவர்களும் திரும்பித் தங்கள் தேசம் போய்விட்டார்களா?

[விநதசே] அன்பே, கல்லியாணமுடிந்து எல்லாரும்போய் விட்டார்கள்.

[கத்துரு] நாத, அசுவபதிராசன் மிகவும் ஐசுவரியம்நிறைந்தவனாயிற்றே. மிகவும் ஏழையாகிய சாவித்திரிக்கு என்ன நற்கொடைகள் கொடுத்தான்?

[விநதசே] கண்ணே, அந்தப் புதுமையை நான் என்னென்று சொல்வேன். தன்னிராச்சியத்திற் பாதியையும் சாவித்திரியை நிறுத்து அவள் நிறைபோல முப்பது பங்கு நிறையுள்ள கனகத்தையும் அசுவபதி கொடுக்கவந்தான். அவைகளை சாவித்திரி கைக்கொள்ளாமல் தன் தந்தையை நோக்கி மிகவும் விந்தையா யுரைத்தாள்.

[கத்துரு] அவள் என்ன சொன்னாள்?

[விநதசே] அவள் அசுவபதியை நோக்கி என்னை ஈன்றெடுத்த ஐயனே.

வெண்பா.

என்னார் கணவற் கிருப்பதே யென்றேட்டம்
தின்னா தவன்கழிக்கும் தெள்ளமுதே—துன்னுமுயர்
நல்லுணவு நீயுதவும் நற்கொடைக ளென்வினையை
வெல்லவிதமாமோ விளம்பு.

என்று மனங்களித்துச் சொன்னாள். அது மட்டுமா தானுடுத்திய ஆடைகளையும் தான் அணிந்த ஆபரணங்களையும அங்கு வந்திருந்த ஏழைகளுக்குத் தானம் செய்துவிட்டுத் தன் கணவனையும் மாமன் மாமியையும்போல மரவுரியைத் தரித்திருக்கின்றாள். அவளுடைய மாமன் மாமிக்கு அவளும் அவளுடைய புருஷனும் மனங்களித்துச் செய்யும் கைங்கரியங்களை என்னால் உரைப்பதரிது.

வெண்பா.

அம்மைநலும் கொண்ட வரசன் மகனும்தான்
செம்மையொடு பெற்றோர் திருவடிமேல்—அம்மநிதம்
பண்ணும் பணிகாணிற் பற்றியினி வாராதுன்
கண்ணிரண்டு மங்குறையுங் காண்.

[கத்துரு] கேட்கக் கேட்க ஆனந்தமா யிருக்கின்றது. நம்முடைய கிரகத்துககுச் செல்வோம்.

[விநதசே] இன்னும் அங்கு நடந்த விந்தைகளை உனக்குப் பின்பு உரைப்பேன். நமது மனைக்குப் போவோம்.

மறைதல்.

பிரவேசகம் முடிவு.



## ஐந்தாவது அங்கம்.

சத்தியவான் தோன்றல்.

(சத்தி) (மனத்துள்) எனக்கு அறிவு மிரண்டாகவும் உடலு மிரண்டாகவும் இருக்கின்றன போல் தோற்றுகின்றது. என் தந்தை தாய்க்குச் செய்யவேண்டிய பணிவிடைகளை யெல்லாம் என் கண்மணியாகிய சாவித்திரி ஒப்புக்கொண்டுவிட்டாள். அட, அட! என்ன ஆச்சரியம்! அந்தப்புரத்திலிருந்து ஐம் புலன்களின் வழியேசென்று சுகங்களையட்டும்மேலாகக்கொள்ளும் ஜாதியிற் பிறந்த அந்தப் பெண்குயிலுக்குத் தருமங்களெப்படித் தெரிந்தனவோ. வேதார்த்தங்களையும் தெரிந்திருக்கிறாள், சாஸ்திர முறைகளில் அவளுக்குத் தெரியாதது

ஒன்றையுங் காணோமே. கண்கள் தெரியாவிட்டாலும் அவ ளுடைய குணங்களை உரைத்து உரைத்து என அன்னையும் பிதாவும் அளவற்ற ஆனந்தத்தை அடைகிறார்கள்.

(விருத்தம்.)

குற்றம் நேரிடினுமாயந்தே குணமெனக் கருதுமீன்றோர்
பற்றிலா வறிவுநன்கே பகருநல்லரிய நண்பர்
பெற்றவர் மனதுவக்கும் பேதையா மனைவி நான்கும்
உற்றிடி னுலகம் மாந்தர்க் கும்பர் நாட்டினு மேலாமே.

(சாவித்திரி தோன்றல).

(சாவி) என் அன்ப, என் மாமியும் என் மாமனும் இடை விடாது என்னோடு அன்புடன் வசனிக்கிறார்கள். நான் ஒரு நாளும் உணவு சமைத்தறியாதவளாக யிருக்க நானிடும்உணவு தேவாமிர்த மென்கிறார்கள். ஞானமும் நீதியும் உருவுடன் வந்தனபோல் விளங்குகின்ற உமது தந்தையையும் தாயையும் மாமனும் மாமியுமாக அடைய நான் புரிந்த பூசை எத்தன்மை யுடையதோ.

(சத்தி) என்கண்ணே பயோநிதியின்கண் உதித்த லட் சுமிபோல் ஐசுவரியம் நிறையும் மன்னன் குலத்திற் பிறந்த நீ வறுமை நிறைந்த என் வீட்டிற் புகுந்தனை. உனக்கினிய பொருளிங்கே என்ன இருக்கின்றது. யௌவனம் நிறைந்த சிறிய மாதர்களுக்கு, உடல் நிறைந்த ஆபரணங்களும், பெட் டி நிறைந்த தனமும், ஏவல் புரியும் வேலைக்காரர்களும் முக்கிய மாக விருப்பமுள்ளவைக ளல்லவா.

(சாவி) என் உயிர்க்குயிர் போன்ற அன்பனே! நீ யறியா தது என்ன இருக்கின்றது. ஆபரணத்தையே மேலாக நினைக் கும் பேதை கணவனுடைய ஐசுவரியத்தையும், தனத்தையே மேலாக நினைப்பவள் கணவனுடைய மானத்தையும், ஏவலாட் களை விரும்புகின்றவள் கணவனுடைய சுகத்தையும், அழிக்கி ன்றாள். ஒரு குலமகளுக்கு ஆபரணங்களி லிச்சையுண்டாகி விட்டால் அவள் கணவனுக்குப் பிச்சையும் அரிதாகிவிடும்,

அவளுக்கு பணத்தில் ஆசையும் திரவியத்தை தானகவே கொடுத்து வாங்குவதில் மகிழ்ச்சியும் உண்டாகிவிட்டால் அவள் குலடையிலும் கேடுகெட்டவள். அவளை மணம் செய்வதினும் ஒருவன் ஒரு கணிகையை மணம்புரியலாம். அவளை கல்யாணம் செய்த புருஷனும் ஒரு பிணம்போல் ஆவான். ஏவலாட்களை விரும்புகின்றவளா புருஷனுக்குப் பணிவிடை செய்யப் போகின்ருள்? அவள் தன் சுகத்தையே மேலாக நினைத்து கணவனுக்கு உண்ணவும் சோறுதவாத பேயாக இருப்பாள். உன் அன்புதான் எனக்கு ஆபரணங்களாகவும் நீயே எனக்கு குறைவற்ற தனமாகவும், உனக்குப் பணிவிடை செய்யும்படியாக முன்னமே புண்ணியங்களைப் புரிந்திருக்கின்ற என் கை முதலிய அவயவங்களே எனக்கு ஏவலாட்களாகவும், இருப்பதால் எனக்கு என்ன குறை யிருக்கின்றது.

(சத்தி) கிளியே என்ன இருந்தாலும் என் வீட்டில் சகல வேலைகளையும் நீயே செய்வது தகுதியா. சர்க்கரைப் பாத்தியில் தேனைப் பாயவைத்து வளர்த்த கற்பகக் கன்றை முள்ளால் நிறைந்த தோட்டத்துக்கு வேலியாக வைத்ததுபோல் மலர்போலும் நுட்பமாகிய உன் அவயவங்களை வனத்தில் வாசம் செய்யுமனங்களுடையமனைத் தொழிலில்உபயோகிக்கின்ருய். உன்னுடைய மெல்லிய சுபாவத்தை அன்று நீதிமதி எனக்குரைக்கவில்லையா.

(விருத்தம்.)

மெல்லிய விதழ்கள் சேர்ந்த மெத்தையி லுனையுன்ருெண்டர்
வல்லியர் நடத்தும் போதவ்வன்மை தாங்காம லுன்ருள்
செல்லவெண்ணு துன் மன்றற் செங்கையோ கமலந்தன்னைப்
புல்லவே சிவக்குமென்கில் பூவையுன் மேனியென்னும்.

(சாவி) பாவமிகுதியா லமைந்த பெண்பிறவிக்குக் கணவனுடைய வீட்டிற் பணிவிடை செய்வதினும் வேறு என்ன தருமமிருக்கின்றது. என்ன கருமத்தினுல் ஈளாயினிக்கு மதுசூதனே உடற்பிறந்தாளுகவும், ஐந்து இந்திரர்களே ஐந்து கணவர்களாகவும், ஐந்தாவது வேதமென்னும் பாரதம் அவள்மேன்மையைப் புகழும் நூலாகவும் அமைந்தன. மேலும்

விருத்தம்.

கொய்யும் நன்மலர் கொள்ளுவ தெப்பயன்
அய்யன் பூசை தனக்குதவாதெனில்
துய்யவும் மனைவேலை தொடாத வென்
பொய்யுமேனி யிருக்கிலென் போயெனும்.

(சத்தி) என் தந்தைதாய்க்குப் பணிவிடைகளையெல்லாம் நீயே புரியின் நானுடலெடுத்ததற்குப் பயன் வேண்டுவதில்லை யா; அவர்களுக்கு முழுக்காட்டுவதும் உன் வேலை யென் கிறாய். அவர்களுடைய பூசை நேரத்திலும் அவர்களுண்ணும் பொழுதும் அவர்களருகிலிருந்து எல்லாக் கைங்கரியங்களையும் நீயே செய்ய வேண்டுமென்கிறாய்.

விருத்தம்.

நண்ணிய மலராற் கல்லை நறுக்குதல்போல வென்றன்
கண்மணி யிதழ்நேருன்றன் கையினாற் பணியனைத்தும்
பண்ணுத லுசிதமாமா பாவையே யெனை யின்றேனை
நண்ணியே பணியிற் கொஞ்சம் நானுமே செய இணங்காய்.

(சத்தி) (திடுக்கிட்டு) அன்னமே, என் தந்தை என்னை அழைக்கிறார். நான் போய் வருகின்றேன்.

(சாவி) (மனதுக்குள்) ஐயோ, எனக்கு இப்போது கிடைத்த மகா பாக்கியமானது இதற்கு முன்னமே கிடைக்க வில்லையே. நான் புரிவதனைத்தும் புண்ணியமாகவும் நான் உணர்வதனைத்தும் ஆனந்தமாகவும் இருக்கின்றனவே. எனக்குக் கிடைத்திருக்கும் நிலைமையானது உயர்ந்த பரமபதம்போலு மிருக்கின்றது.

(விருத்தம்.)

ஆதியென் மாமன் மாமியோ கருணை நிதி யெனைக்கொண்ட நாயகனோர்
காதிலா வமுதம் தானவர் புரிதல் குறைவிலா நற்றவம் இனமும்

சூதுசெய் பொரியின் வினையகற்றிடு மித்தூய நற்சோலை யெம் [மில்லம்
ஆதலால் யானிங்குற்ற வாழ்வது போலார் அடைந்தார் சகந் [தனிலே.

பிராரப்த கருமத்தினு லுலகத்திற் பிறக்கின்றோம். ஒன்றுமறியாத குழந்தை ஒன்றைச் செய்யுமாறு உனக்குப் பழமும் தேனும் சர்க்கரையும் தருகிறேனென்று ஒருவர் பொய்யாக உரைக்கும்போது அக்குழந்தைக்கு மிகுந்த சந்தோஷம் உண்டாகி ஏவினதை அக்குழந்தை செய்வதும் அது ஒன்றைச் செய்யாதிருக்குமாறு இதோ புலிவருகிறதென்று பொய்யாக வுரைக்கும்போது அக்குழந்தைக்கு பயத்தினுல் துக்கமேலிட்டு தடுத்ததை அது செய்யாதிருப்பதும், நம்மால் பார்க்கப்படுகின்றன. அவ்விதமாகவே அவிவேகிகளாகிய மானிடர்களுக்கு அவர்களுடைய இந்திரியங்கள் உண்மையில்லாதவைகளை உண்மை யுள்ளவைபோற் காட்டி வீணுகச் சுகம் போலவும் துக்கம்போலவும் பொய்யான தோற்றங்களை உண்டுபண்ணுகின்றன. பொய் வசனமென்று குழந்தை அறியாதது போல இந்திரியங்களின் மோசத்தை அவிவேகிகள் அறிகிறதில்லை. அந்த மோசத்தினு லமையும் விகாரங்களல்லவோ நம்மைச்சுகிகளாகவும் துக்கிகளாகவும் இருக்கும்படி பேதம்செய்தன. அந்த விகாரங்களுக்குக் காரணமாகிய இந்திரியங்களை ஒடுக்குவதுதான் மானிடப் பிறவிக்குப் பயன். அந்தப் பயனை நான் ஙுங்குமிங்கும் தேடித்திரியாமலும் பிறர்களை நாடி வேண்டுவதின்றியும என் அகத்திலேயே நான் அடைகின்றேன்.

(சத்தியவான் தோன்றல்).

(சத்தி) [சாவித்திரியைத் தழுவி].

அன்னமே, தினமும்போல நான் காடு சென்று என்றந்தையின் பூசைக்கு வேண்டிய மலர்களும் தழைகளும் நாம் உண்ணுதற்கினிய கந்தமூலபலங்களும் கொண்டுவருவேன். நீ இங்கே யிருந்து உன் மாமன் மாமியர்களைப் பார்த்துக்கொள்.

(சாவி) என் உயிர்க்குயிரோ? என்மனமும் என் கண்களும் உன் கூடவே வந்துவிடுகின்றனவே, நானிங்கே சுழுப்த்தி செய்கின்றவள்போலிருக்கின்றேன் நீபோய் சீக்கிரம் வரவேண்டும்.

(சத்தி) தாமதமின்றியில் வந்துவிடுவேன்.

[மறைதல்]

(சாவி) (அவன் செல்லும் வழிநோக்கி அஞ்சலிசெய்து)

(மனதுக்குள்) [வெண்பா]

மாந்தர்க் கருளும் வனதேவதைகா ளென்
காந்தன் வருதலுன் கானகத்தில்—சாந்தநிறை
நலமுகனைத் தீதுநாடா துயிர் காக்க
நில்லு மவன் மருங்கே நீர்.

(அங்குவரும் கிளியை முத்தமிட்டு) கிளியே, நானும் என் கணவனும் இரவில் பேசிக்கொள்ளும் வசனங்களை கூசாமல் என் மாமன் மாமியோர் முன்னர் புகலுகின்றாயே! உன் வாய்க் கொழுப்பை என்னவென்று உரைப்பேன்.

[கிளி பறந்து தூரநின்று]

(கிளி) [வெண்பா]

தெள்ளமுதே தயன்பு சிறிதேனுமின்றியெனைக்
கள்ளமதன் கையிற்காட்டினாய்—ஒள்ளுமுயர்
உரைகையான் மாண்டாலுண்டேகதி மாற்றான்
தன்கையான் மாண்டிடல் தாழ்வே.

(சாவி) [கிளியைப்பிடித்து அதன்வாயை மூடி] (மனது) ...தென்ன அநியாயம் அன்று இரவில் நான் கொஞ்சம் ஊடலால் என் நாயகனை விட்டுப் பிரிந்து கோவித்திருந்தபோது ...வன் எனக்குச் சமாதானமாகும்படியாக உரைத்த அன்பான சனங்களை வாய்பழகி நீயுரைக்கின்றாயே? நல்லவேளை அதை ...க்கொருவரும் கேட்கவில்லை.

[சத்தியவான் தோன்றல்]

(சத்திய) கண்மணியே நான் அந்த வசனங்களைக் கேட்டுக்கொண்டுதான் வந்தேன் நீ அந்தக்கிளியின் வாயை விட்டுவிடு, நீ பிந்தியுரைத்த தேன்போன்ற மொழிகளையும் சொல்லிட்டும்.

(சாவி) [அவன் கொண்டுவந்த மலர்களையும் கனிகளையும் வாங்கிக்கொண்டு] அன்ப நான் இவைகளைப் பூசைமனையிற் கொண்டுபோய் வைக்கிறேன்.

[மறைதல்]

(சத்திய) [மனதுக்குள்] இம்மடக்கொடி யென்னைப் பவநோயிலிருந்து விடுவிக்கவந்த அவுடதமா? கர்மபூமியாகிய இவ்வுலகத்தினின்றுபரமபதத்துக்குநானேறுவதற்காகவமைந்த ஏணியா.

(விருத்தம்)

அன்பு கூர்ந்திடலி லன்னை அறமியற்றிட லில்லாள்
துன்பு போக்குவதிற் றெய்வம் தோன்றும் நன்மதியில் வாணி
இன்ப மீய்ந்திடலில்மேலா மிரதியுமிவளா மென்கில்
முன்புயான்புரிந்த தென்னும் மொழிந்திட வறிகிலேனே.

எல்லாக் குணங்களும் பொருந்திய மடக்கொடி ஒருவனுக்கு இல்லாளாக வமைந்தால் நல்லறங்களைச் செய்வதினால் பூவுலகத்திலும், சுகத்தை மேலாக அனுபவிப்பதால் சுவர்க்கலோகத்திலும், வைராக்கியம் மிகுந்து பரம்பொருளின் சுவரூபமின்னதென்று தோன்றுவதால் பிர்மலோகத்திலும், அவன் ஒரே சமயத்திலிருந்து கொண்டிருக்கிறான். அவனிடத்தில் லோகோபகாரத்தை யுடைய இல்லறமும், அறத்தின் பலப்பிராப்தியாகிய சுவர்க்காநுபோகமும், வினையொழிந்த நிலையாகிய பிர்மலோக பதவியும் கலந்து விளங்கிக்கொண்டிருக்கும். ஆனால் இல்லறத்துக்குரிய பந்தமாவது சுவர்க்க போகத்துக்குரிய

பரிமாணமாவது அவனிடத்திலிருந்து. துறவியாயிருப்பவன் உலக வாழ்க்கையினின்றும் பொருளினின்றும் விலகியிருப்பான் ஆனால் உத்தம நாயகியையுடைய கிரகஸ்தனானவன் பரம்பொருள் போலவே பற்றன்றி எல்லா வாழ்க்கையிலும் பொருளிலும் தாமரை யிலையின் தண்ணீரெனக் கலந்திருப்பான். இவன் துறவியிலும் மேலானவன். நான் சாவித்திரியை மணம் புரிந்து பதினொறு மாதங்களும் சில நாள்களும் ஆகிவிட்டன இந்த மத்திய காலத்தில் நானும் என்னை யின்றோர்களும் அவளாலடைந்த சௌக்கியத்தையும் ஆனந்தத்தையும் இவ்விதமென்று சொல்லுவதறிது. அவளென்ன காரணத்தினாலோ நேற்றும் இன்றும் உபவாசமா யிருப்பதுடன் வழக்கத்துக்கு அதிகமான காலம் தியானத்திலு மிருந்துகொண்டிருக்கிறாள் ஆனால் அது ஆச்சரியமில்லை. நல்லகுலத்திற் பிறந்த மங்கைக்கு விவேகம் மட்டும் இருந்துவிட்டால் அவளுரைப்பதெல்லாம் நீதியாகவும் அவள் செய்வதெல்லாம் தபசாகவுமே யிருக்கும்

(வெண்பா.)

சாந்தம் பொறுமை தயை மெல்லவே புகலல்
காந்தன் மிசைதீராக் காதலொடு—நேர்ந்த துகைக்
கொண்டீட மகிழுங் குலமகளினைச் சிறிது
கண்டாலும் போமே கலி.

என்றந்தை பூசைபுரியும் காலமிது வாகையால் நான் அவர் பக்கத்திலிருந்து பணிவிடை செய்யவேணடும். என் கண்மணியாகிய சாவித்திரி உபவாசத்தினால் மேனி வாடியிருக்கிறபடியால் என்றந்தைக்குச் செய்யவேண்டிய கைங்கரியங்களைப் பெரும்பாலும் நானே புரியவேண்டும்.

[மறைதல்].

ஐந்தாவது அங்கம் முடிவு.

---

## ஆறுவது அங்கம்.

(சாவித்திரி தோன்றல்)

(சாவி) (மனவருத்தம் அபிநயித்து).

இந்த உலகத்தின் வாழ்வு அவ்வளவுதான்.

(விருத்தம்.)

மானிடப்பிறவி நீர்மேல் வருகுமோர் குமிழி போலாம்
ஊனுட லிளமை வாழ்க்கை உறுதியில்லாத கானல்
வானருஞ் செல்வந்தோன்றி மறைந்திடு மின்னலொக்க
ஏனிவை சிறிதுமெண்ணு தேங்குவார் ஞாலத்தோரே.

நாரத மகாமுனிவ ருரைத்த காலமானது வந்துவிட்டது. இன்றுதான் அவருரைத்த கடைசி நாள். அவர் சொன்ன போது பதினொரு மாதங்க ளிருக்கின்றன வென்று தைரியங் கொண்டேன். அவைகள் சடிதியிற் கழிந்தன. அம்முனிவ ரொருவா றுரைத்தருளி யிருந்தாலும் என் மனசு சஞ்சலப் படுகின்றதே, ஐயோ நானென்ன செய்வேன். பெரும்பாக்கி யம் பெற்றிழப்பவரைக் காட்டிலும் பெறாதவர்கள் மெத்த சுகிகள்.

(விருத்தம்).

மகவிலார் நல்லோர்வாய்ந்த மகவினை யிழப்பர் தம்மின்
தகுபொருளொழிந்திட்டாரின் றளர்ந்திடும் மிடியர் மேலாம்
நிகரிலாக் குணமமைந்த நேயனோடின்னுள் வாழ்ந்திட்
டிகமதி லவன்பிரிந்தே யென்றுநா னிருப்பனம்மா.

இன்று வரும் கொடியவிபத்தை நினை நினைக்க என்மனம் பதருகின்றதே, அதைக்கேட்டால் என்கணவனுடைய சிந்தை வருந்து மாகையால் அதைநான் அவனுக் குரைக்க வில்லை.

அந்தணன் மாமன் மாமிமாரும் அறிவார்கள். அவர்கள் [illegible] ஞானிகளானதால் என் கணவனுடன் நானும் இன்று [illegible] குச் செல்ல வேண்டு மென்று நான் கேட்டவார்த்தை [illegible] தனு மில்லாமல் தீர்க்க சுமங்கலியாக வாழ்வை பெற அமிர்த மழை பொழிந்ததுபோல் ஆசிர்வதித்தார்கள் அவர் களுடைய ஆசிர்வாதமும் நாரதமகா முனிவருடைய கருணை நிறைந்த வீரமும் என் அன்பனுடைய உயிரைக்காக்காவோ.

(ஆகாசத்தைப்பார்த்து)

இப்போது ஒன்பது நாழிகை ஆகின்றது. இன்னுமிரண்டு நாழிகைக்குப்பின் இன்னது வருமென்று தெரியவில்லையே.

(விருத்தம்)

பாருயில் கடையா வமுதையான் பெறவென் றருளினு லம்மை
[யா னதனைச்
சீருடன் வெகுநாட் பருகியே மகிழச் செய்வளோ வென்னரும்
[வினையின்
கூரினு லினியா காதெனக் கென்றே கொள்வளோ வென்கரம்
[நின்று
சேருமென் நோன்பும் நல்குமோ பயனச் செல்வியின் திருவுள
[மறியேன்.

(இருகண்களிலும் ஜலம் பெருக நிற்கின்றாள்)

(சத்தியவான் தோன்றல் புஷ்பக்குடலையுடன்)

(சத்தி) [சாவித்திரியை நோக்கி]

[மனத்துள்] என் கண்மணி ஏன் இப்படி வருந்துகின் றளோ தெரியவில்லை. மூன்று நாள் உபவாசத்தால் அவள் [illegible] மெலிந்திருக்கிறது. என்ன காரணத்தினல் உபவாசம் [illegible] அனுஷ்டிக்கிறுயென்று கேட்டால் யெல்லாம் உன் [illegible] நன்மைக்கென்று சொல்லுகிறுள். அவளை நான் மணம்புரிந்த [illegible] அடையாத நன்மை ஒரு இருக்கிறது.

[illegible]

[பிரகாசகம்] மயிலே நீ ஏன் வருந்துகிறாய். நீ கண்ணீர் விடுவதற்கு முகாந்தரமென்ன?

வெண்பா.

அன்னமே என்றந்தை யென்னை வெகுண்டறியார்
உன்னறிவு நோக வுரைத்தேனோ—என்னுயிரே
சற்றும்நீ வாடிற் சகியா வனவுயிர்கள்
நற்றிருவும் நைந்திடுவாளே.

[சாவி] என் அன்பே, இரவில் தனிவழிநடப்பவர்கள் தங்கள் மடியிலிருக்கும் தனத்தின்மேல் வைத்திருக்கும் கருத்தினால் கவலைகொள்ளுதல்போல் எனக்குக் கிடைத்திருக்கின்ற ஒப்பற்ற நிதியாகிய நீ எந்நாளும் உயிர்பொருந்தி யிருக்கவேண்டுமே என்கிறகவலையினால்சிலசமயங்களில் என் மனம்வாட்டமடைகிறது. அது ஒன்றுதவிர நான் சிந்தைப்படுவதற்கு வேறு என்ன காரணமிருக்கின்றது?

[சத்தியவான்] உன்னை மனைவியாக அடைந்த எனக்கு என்னகுறையிருக்கிறது. என தந்தையும் தாயும் உன்னுடன் ஏதோ வசனித்து உன்னை முத்தமிட்டு அனுப்பினார்களே அதென்ன?

[சாவி] நேய, நான் இன்று காலையில் செய்த பணிவிடைகளினால் அவ்விருவர்களும் மிகவும் சந்தோஷித்து கண்மணியே உனக்கு நாங்கள் என்னகைம்மாறு அளிப்போமென்று உரைத்தார்கள். கருணாநிதிகளே! நீங்கள் என்னைப் பார்க்கவும் உங்கள் புதல்வன நிறைந்த ஆயுள்பொருந்தி யிருக்கவும் நான் பெற்றால் அதுவே நான் செய்யும் பணிவிடைகளுக்குப் பலனாகுமென்றேன். அதைக்கேட்டுஸந்தோஷித்து நீவேண்டிய வரமொன்றுகேள் என்று அவர்கள் புகன்றார்கள்.

[சத்தி] நீ கேட்ட வரமென்ன?

[சாவி] இன்றுஎன்கணவனுடன்நான்காட்டுக்குச்சென்று வரவிடைகொடுக்கவேணுமென்றுகேட்டேன். அவர்கள் அத்

-த்தையு மளித்து நீ தீர்க்க சுமங்கலியாய் வாழுமையென ு
த்தியம் நிறைந்த அவர்களுடைய வாயினால் எனக்கு ஆசீர்வதி
ன்னை முத்தமிட்டனுப்பினார்கள்.

(சத்திய) என் கண்ணே, மூன்றுநா ளுபவாசத்தால்
ன் உடல் தளர்ந்திருக்கின்றது. வெய்யோன் மிகவும் கொடு
மயாய்க் காய்கிறான். மார்க்கமும மிகுந்த சங்கடமுள்ளதா
ருக்கின்றது. நீ காட்டுக்கு எப்படி வரமுடியும்.

(சாவி) பெரியோர்கள் கொடுத்த வரத்தை என் சிர
ன்மேல் வகித்திருக்கின்றேன். அந்த வரம் கொடுக்கும்படி
ன்னையும் யாசிக்கின்றேன். நான் இந்நாள்வரையில கேட்ட
த இல்லையென்று நீ மறுத்ததுண்டோ?

(விருத்தம)

கூடுமென் றவமே குணமே யெனு
வாடுநல வுயிருக் குயிரே யினி
தேடுநீ வினவா தொருகா ரணம
நாடுமிவ் வரமொன் று நயந்திடாய்.

(என்று சத்தியவானைத் தழுவுகின்றாள்)

(சத்தியவான்) என் கண்மணி, நீ ஒன்றைக்கேட்டு நான்
தை மறுத்தால் அதற்கு மேலான கொடுமை என்ன இருக்
றது. உன் மனப்படியே ஆகட்டும. நாம் போகலாம்
துதான் மார்க்கம்.

(இருவரும் மார்க்கம் அபிநயித்து)

(சாவி) நீ செல்லும் காடு இன்னம் எவ்வளவு தூரத்தி
ருக்கின்றது?

(சத்தி) இன்னும் கொஞ்சம் தூரந்தான் இருக்கின்றது.
கால் தடுமாறாமல் நடக்கவேண்டும்.

(சாவி) [முன்னிருக்கும் மரத்தைப்பார்த்து ஐயோ] என்ன

(சத்திய) கண்ணே. ஏன் இப்படித் திடுக்கிடுகின்றாய்.

(சாவி) (புன் சிரிப்புடன்)

அன்ப! நாயகனும் நாயகியுமாகிய அந்த அன்னங்கள் விளையாடுகையில் ஆண் அன்னம் மரத்திலிருந்து தவறிக்கீழே விழுந்தது. ஐயோ என்று திடுக்கிட்டேன். உடனே அதுமறுபடியும் பறந்து அன்னப்பேட்டுடன் கூடிவிளையாடுகின்றது.

நாயக! அதுநல்ல சகுனந்தானே?

(சத்தி) என்சிந்தைக்கு அமுதம்போன்றகுயிலே! நீவருந்தியபடியால் அந்த ஆண் அன்னத்துக்கு அருகில் வந்த யமதேவன் அதை விட்டு விட்டுப்போனான் போலுமிருக்கின்றது. இதோபார் வேறொரு புதுமையை.

(விருத்தம்)

வஞ்சியாங் கிள்ளை யுடலாற் பதியைமருவிடா தேகவப்
[பதியாம்
கொஞ்சுநற் கிளிபூங் கனியளித் தவளைக் கூவிடுங் கா
[லொரு வேடன்
அஞ்சமோர் கணைதூ விடவும்நா யகனை அணுகியே பின்
[அடலாது
கொஞ்சமாய் விலகிச் சென்றதவ் விணைபின் கூடியே தழு
[வுகின் றனவே.

(சாவி) [மனத்துள்] என் கணவனும் அப்படியே உயிர் பொருந்தி என்னுடன் வாழ்வனோ

(கண்ணீருடன் சத்தியவானைத்தழுவுகின்றாள்)

(பிரகாசம்) அன்ப. இவ்வுலகத்தில் யாகிடர்கள் சுகம் பெறுவதற்கு எத்தனை இடையூறுகளிருக்கின்றன.

(சத்தி) கண்ணே, இதுதான் நான்தினந்தோறும் வருகின்ற காடு.

(சாவி) இதுதானோ? மரங்கள் நிறைந்த சோலையினால் எங்கும் அலங்காரமாக விருக்கின்றது. நேய, இப்போது நாழிகை என்ன இருக்கும்?

(சத்தி) இப்போது பதினொருநாழிகையாகின்றது.

(சாவி) ஆ! அதென்ன மரம்! மிகவும் அழகாகப் பூத்திருக்கின்றது.

(சத்தி) குயிலே, அது இரசால விருட்சம். அது இப்போதுதான் மலர்விடுகின்றது. இன்னுமிரண்டு மாதங்களுக்குள் மிகவும் சுவையுள்ளகனிகளைப்பயக்கும. தினந்தோறும் அந்தக் கனிகளைக் கொணர்ந்து உனக்கு அளிப்பேன்.

(சாவி) [மனத்துள்] இன்னும் ஒரு கணத்துக்குள் நடக்கப்போகின்றதை என்கணவன் அறியாம லிரண்டு மாதங்களுக்குப் பின் ஆவதை எண்ணுகிறான்.

(கலித்துறை)

இன்றோ இமைப்பொழுதோ கணமோ இரவோ பகலோ
என்றோ உறங்கையிலோ வுணவுண்கையிலோ யிசைந்து
மென்றோண் மருவையிலோ வுயிர்போகிவிடுமதற்குள்
சென்றோடி யெத்தனையோ விதம்கோடித் திடுமுள்ளமே

(பிரகாசம்) அந்த மலர்கள் மிகவும் செவ்வையா யிருக்கின்றன.

[சத்திய] (அந்த மரத்தின் மேற் கொஞ்சமேறி மலர்கள் கொய்கின்றான். உடனே கீழே இறங்கி) என் உயிர்க்குயிலே எனக்குத் தலைவலி மிகுதியா யிருக்கின்றது.

(தலையிற்கைவைத்து)

மரத்தின் மேலே கரிய நிறமுள்ளவர்களாக மூன்று பேர்களைப் பார்த்தேன். தலைவலி மிகுதியால் என் கண்ணுக் கொன்றும் புலப்படவில்லை. நான் இந்த மரத்தடியிற் கொஞ்சம் படுத்துக் கொள்ள வேண்டும்.

[சாவித்திரி] கீழே உட்கார்ந்து கொண்டு தன் மடிமேல் சத்தியவானைப் படுக்கும்படி செய்து]

அன்பே உனக்கென்ன செய்கின்றது?

[சத்தியவானுக்கு மயக்கம்மேலிட்டு உத்தரம் சொல்லாததுகண்டு] ஐயோ, நானினி என்ன செய்யப்போகிறேன்.

[கண்மூடி தியானித்து]

[விருத்தம்]

கண்டார்க்குஞ் சொல்லுதவாக் கருணை மேவுங்
கடலே ஞானிகட்கினிய கண்ணே மாயை
விண்டார்க்கு நலனுறவே மறையா மிலவின்
மெய்விளக்கே சனகாதி மேலோர் நாளும
கொண்டாடிச சென்னிபுனை மணியே வானோர்
குலத்துயாதே வெகருணைக் குன்றே ஆலம்
உண்டான்சிற தைக்கினிகற கண்டேதேனே
உன்னருளா லென்கணவனனுப்ப வேண்டும்.

எசசமயந் தோர்களுமிப புவியில் நாடி
எங்கடவு ளுன்குலத்தே வெனறு பேதித்
திசையொடு போறறுமொரு பொருளே தொண்டர்க்
கிடைவழி காட்டிடுமெநற் றுணையே பொலைாத
துசசமெனும பாசமொழிக் திட்ட பேர்க்குத
துரியசுகக் கனிபழுந்துச சொரிந தளிக்கும்
உசசிதமாங் கறபகமே அருளே அன்பே
உன் அருளா லென்கணவ னுப்பவேண்டும.

(மரத்தை நிமிர்ந்துபார்த்து).

விருத்தம்

கற்பை யேதுணை கொண்டவள் நானெனில்
நற்பலன்மிக மூவசை நல்குமேல்
நிற்ப தென்கினு யர்ந்திடு நன்னெறி
முற்ப டட்டமிருந்தவர் மூவரும்.

[மூவர்தோன்றல்]

[நீலன்] அடே கால, அட தூதா, இதோ சத்தியவான் இறக்கிறான். உலகத்தார்சிப்பியைத்தள்ளி முத்துகளைக் கொள்

வதுபோல அவனுடலை மண்கொள்ளும்படி அகற்றிவிட்டு அத
ற்குள்ளடங்கி நிற்கும் உயிரைக் கைப்பற்றுங்கள்.

[மூவரும் சத்தியவானை அணுகல்]

[காலன்] அட, இதென்ன, இந்த மாதினிடமிருந்து அக்கினியானது வெள்ளயமேபோல் பெருகிவருகின்றது. என்னுடலிற்பாதி கருகிவிட்டதே.

[தூதன்] நானிங்கு நிற்கவேமாட்டேன். சத்தியவானுயிரை நாம் கொண்டுபோக முடியாது. சில சமயங்களில சித்திரபுத்திரன் பொய்க்கணக்கை யெழுதிவிடுகிறான. அதை நம்பி வந்து நாம் சீர்குலைய வேண்டியிருக்கிறது.

[நீலன்] நண்பர்களே, ஏதோ நமக்கு கஷ்டகாலம் வந்திருக்கின்றது. நாம் அந்த மாதின் முன் தோன்றி சத்தியவானுயிரை நமது கையிலொப்புவிக்குமபடி அவளை கேட்போம் சமாதானமாக நமது வேலையை முடித்துககொள்ளாத பட்சத்தில மிகுந்த கேடு விளையும் போலிருககிறது.

மூவரும சாவித்திரியின் மூன் நிற்கின்றார்கள்

(சாவித்திரி) [ஒருகையினால் சத்தியவானை இருகக்கட்டிக்கொண்டு]

நீங்கள் யாவர்? உங்களைக் கண்டவுடன் என் கணவனுக்குத் தலைவலியுண்டாகி மயங்கிப் படுததிருக்கிறார். அதற்கு என்ன காரணம?

[காலன்] அம்ம?

விருத்தம்

பாரினிற் கரும நூலின் பான்மையாற் பிறந்தே சாகு
வாரியற் றிடும் வினைக்கிப் பலனளித் திடுவா ரொன்று
கூருமோர் கடுவ ளுணை கொண்டவூ ழியர்கள் நாங்கள்
ஆரிவ னுனக்குத் தூரத் தகலுவா யிவனை விட்டே.

(சாவி) [வந்தனம் செய்து]

என் கணவனுடைய உயிர்போகில் என்னுயிர் நிற்காது என்மேற் கருணைகூர்ந்து என்கணவனைவிட்டு விடுங்கள்.

(காலன்) பேதைமை நிறைந்த மாதே கேள்.

வெண்பா

எத்தனைபே ரோகணவ ளிவ்வுலகி லேயுனக்கே
எத்தனைபே ரோவுனைமுன் னீன்றவர்கள்—நித்தம்
உடுத்தியே நீக்கும் உடைபோல நீயிங்
கெடுத்தவுட லுக்கிலையே யெண்.

பெண்ணே, உன் கணவனென்று நீ ஆசைகொண்டது அந்த உடலை. அதை நாங்கள் கொண்டுபோகிறதில்லை. அது தான் ஆகி அழிந்துகொண்டிருக்கின்றது. அதை நீயேவைத்துக்கொள். அதற்குள்ளடங்கியிருந்த சேதனன் என்றும் பிறவாதவன், என்று மிறவாதவன், அவன் எத்தனை உடல்களையோ எடுத்தவன், எத்தனை பேர்களையோ மணம் புரிந்தவன். ஒரு இடத்திற்கூடிச் சற்றுதூரம் சென்று பிறகு பிரிந்து போகும் வழிப்போக்கினர் போல் ஒவ்வொருவருடனும் சேர்ந்தும் பிரிந்தும் செல்லுகிறான். அவனுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம்?

(சாவி) எமதூதரோ! நீங்களறியீர்களா? ஒரு முறையில் அவனுயிர்க்கும் என்னுயிர்க்கும் பேதமில்லை இரண்டு உயிர்களும் ஒரு பொருளினுடைய தோற்றங்களாகையால் அவ்விரண்டும் ஒன்றாகமதிக்கப்படவேண்டும். அப்படியாகில் என்னுயிரையுங்கொண்டுபோங்கள். ஒருயிர்தான் கொண்டுபோவோமென்று நீங்கள் சொன்னால் என் கணவனுயிருக்குச் சமானமாகிய வென்னுயிரைத்தருகின்றேன். அவனுயிரை விட்டுவிடுங்கள் மற்றொரு முறையில், என்கணவனுயிர் அவனுடலையும் அவ்வுடலின் ஒரு அங்கமாகிய என்னுடலையும் அபிமானித்து அவ்விரண்டு உடல்களையும் வாழ்வித்துவந்தபடியால் என்உடலுக்கு ஆதாரமாகிய என் கணவனுயிரை நான் விடமாட்டேன். என்னுயிரையும் சேர்த்துக்கொண்டுபோனால் நீங்கள் நாடிவந்தகாரியம் பயன்பெறும்.

[காலன்] அம்ம. எங்கள் ஏற்பாட்டையறியாய். அரும்பாயினும், பூவாயினும், காயாயினும், கனியாயினும், அதின் காம்பு நைந்தாலொழியக் கீழ்விழமாட்டாது. அதுபோல் பாலியம், கௌமாரம், யௌவனம், வார்த்தகம், என்னும் நான்கு தசைகளால் போதிக்கப்படும் தேகிகளுக்கு பிராரப்த்தகருமமேகாம்பு போலாகி இப்புவனமாகிய மரத்துடன் சம்பந்தத்தை உண்டுபண்ணுகிறது, அந்த பிராரப்த்த கருமம் நைந்தாலொழிய அந்தச் சம்பந்தம் ஒழியாது, உன் பிராரப்த்த கருமம் ஒழியவில்லை, உன் உயிர் எங்கள் கைக்குவராது, சத்தியவானுக்கு இந்த ஜன்மத்துக்குரிய பிராரப்த்த கருமம் தீர்ந்துவிட்டது, ஆதலால் அவனுயிரை மட்டும் நாங்கள் கொண்டுபோகவேண்டும்.

(சாவித்திரி) தேவர் நாடாகிய தென்புலவாசிகளாகயிருந்தும் நீங்கள் உண்மையை அறியவில்லை, மூவகைக் கருமங்களில் நல்லொழுக்கத்தால் சஞ்சிதமும் ஆகாம்மியமும் விளக்கிற் படும் அந்துபோல எறிந்து போகின்றன. வினையின் பயனை வேண்டாதவர்கள் பிராரப்த்தகருமத்தை காலிற்றரிக்கும் பாதரட்சைபோல் தங்களுக்கு வேண்டுமாறுதரித்து வேண்டாதபோது அகற்றுகிறார்கள், அவர்களிடத்தில் உங்களுக்கு வேலையுண்டோ

(காலன்) அப்பா, இவள் மெத்தப் படித்தவளாகயிருக்கிறாள், இவள் சொல்லுவது நமக்குப் புலப்பட்டால் நாமேன் இந்தத்தொழில் செய்கின்றோம். இவ்விதமாகப் பேசித்தானே அந்த மார்க்கண்டன் நம்மையும் நமதரசனையும் சீரழிய வைத்தான். இவள் அவன் தங்கைபோற்றோணிருக்கிறது. ஏதோ நமக்கெல்லாம் மறுபடியும் கேடுகாலம் வந்திருக்கிறது ஒருதரம் பட்டது போதாதா, நமக்கு வேறுபிழைப்பையும் காணோம், நாம் இவள்கையாற் சாகாமல் இங்கு நடந்ததை நமது எஜமானனிடத்திற் தெரிவித்து விடுவோம்.

(நீலன்) அப்படிச் செய்வதுதான் உசிதம்.

(தூதன்) சித்திரபுத்திரன் கணக்கு சரியாயிருந்தால் இப்படி வருமா, அவன்கொடுக்கும் வரியேட்டை வைத்துக் கொண்டு உயிர் தண்டப்போனால் நமக்கு அவமானம்தான் கிடைக்கிறது. கணக்கன் பிரட்டனுகயிருந்தால் உயிர்களில் ஒன்றுவது கைக்குவரமாட்டாது எந்தச் சீமைக்குப்போனு லும் அவன் பிரட்டுத்தானே தலைசுற்றுகிறது. நாம் மரியா தையாய்ச்செல்வோம்.

[மூவரும் மறைதல்]

(சாவித்திரி மனதுக்குள்) (முகத்தைப்பார்த்து) உயி ரிருக்கின்றது. ஆனால் மயக்கம் தீரவில்லை என் அம்மணியின் திருவுளம் எப்படியோ.

[விருத்தம்]

நம்புமடியார்க்கருள் புரியும் நன்மையில்லையோ வுன்னிடம்வேண் டும்மை யணிவோன் முப்புரத் தோர்துஞ்சவகை செய்திட்ட
சம்புவவன்றன் மருங்கிலகத்தானேயமர்ந்தபரஞ்சோதி[பிரான்
வம்பு புரியாதெனைக் காக்கவருவாயருளத் தருணமிதே.

ஐயோ. ஏதோ பயங்கரமாய் இருளுகின்றதே. காற்று ம் ஊழிகாலத்து வாதம்போல் மிகவும் பலமாய் வீசுகின்றது. எங்கோ கடல் பிரண்டுவருவதுபோல் ஒலிகேட்கப்படுகின்றது. அங்குமிங்கும் நெருப்புப்பொரிகளையும் பார்க்கின்றேன். ஒருக் கால் அந்தயமதேவனே வருகின்றுனே. கருணாநிதியாகிய நா ரத மகாமுநிவருபதேசித்திருக்கும் மூவெழுத்தின் பலம் எனக் கிருப்பதால் ஆயிரம் யமன்வந்தாலும் நான் அஞ்சவேண்டுவ தில்லை, வருவது வரட்டும்.

(சத்தியவானுடல் துடிப்பதுகண்டு)

(இருகையாலும் அவனை இருகக்கட்டிக்கொண்டு)

அம்மணி. (விருத்தம்)

## 6-வது அங்கம்.

அல்லல் மிஞ்ச கொடுந்துயரத்திலிப்
புல்லள் வீழ்ந்து புலம்பிடவும்முறை
சொல்விடாம லிருந்திடலேன் துணை
இல்லையே றெது மின்றருள் செய்வையே.

(யமன் தோன்றல்)

(யமன்) [மனது] இது என்ன ஆச்சரியம் இந்தச் சிறு பெண் என் தூதர்களை விரட்டிவிட்டாள். நான் வந்து சத்தியவானுடலைப் பலவாறு மிரட்டியும் கசக்கியும் பார்த்தேன், அவள் அவனைக் கையா லிருகக்கட்டிக் கொண்டிருப்பதால் அவன் உயிர் என் கைக்கு வரவில்லை. உயர்ந்த பதிவிரதைகளின் மகிமை அத்தன்மை யுடையது. அவளிருப்பது உமைபோலும், அசைவது மலர்மங்கை போலும், உரைப்பது சரஸ்பதிபோலு மிருக்கிறது. அவளைப் பார்த்தவுடன் என்னுடைய கோபமானது முற்றிலும் அடங்கி எனக்கு இயற்கையில்லாத சாந்தம் மேலிட்டிருக்கின்றது.

[சாவித்திரியைச் சுற்றிவந்து.]

விருத்தம்.

ஓது நான்மறையுஞ் சிறிதுன்னிடேன்
மாதவன் முதலோராயு மஞ்சிடேன்
நீதியாய்ப் புவிமேல் நிலைநின்றிடும்
மாதர்கற்பு வணங்குமென் றெய்வமே.

(சாவித்திரிக்கு முன் தோன்றி)

(பெண்ணே) அநாதியாயுள்ள காலசக்கிரத்தின் வலிமையுன்னாற் றடுக்க முடியாது. எந்தத் தெய்வத்தின் பலமும் அதற்குமுன் நில்லாது.

ஆயுள் ஒழிந்த சத்தியவானை விட்டுவிட்டு நீ யுன் அகம் போய்ச்சேர்வையாக.

(யமனைத் தலையால் வணங்கி.)

(சாவி) தர்ம சொரூபியாயுள்ள பகவானே! என்னுடல் பொருள், ஆவி என்னும் இவை மூன்றையும் உமக்கே அர்ப்பணம் செய்தேன், என்னைக்காப்பாற்றி அருளவேண்டும், ஆனல் நீர் உரைத்த சொல்லில் நியாயமில்லை.

விருத்தம்.

இவனிலாம லெனக்கினி யேதுயிர்
அவனகன்றிடி லெங்குள தென்னகம்
தவம் நிறைந்த மனத்தரு மாய்ந்திடாச்
சிவமதே யுருவாகிய தெய்வமே.

நீரே பரம்பொருள்! தருமத்தின்மீது நீர் நிறைந்திருக்கின்றீர். நாமரூபங்களா லமைந்த இப்பிரபஞ்சமானது நிலைத்திருப்பதற்குப் பழமை நீங்கிப் புதுமை அவசியமாகையால் பழயனவா யிருப்பவைகளைப் புதியனவாக்கி இப்பிரபஞ்சத்தை வாழ்விப்பதற்காக அழித்தலென்னும் தொழிலை நீர வகித்திருக்கின்றீர். நாமரூபங்களைத் தரிக்கின்ற சேதனனுக்கு அவன் செய்த கருமங்களுக்குத் தக்கபடி தண்டனைகளை விதிக்கின்றீர்

(யமன்) பெண்ணே. அவர்களுடைய செய்கைகளுக்குத் தக்கபடி நன்மைகளையும் நான் பயக்கவில்லையா?

(சாவி) ஞானமே உருவாகவந்த தருமராஜனே! ஸங்கத்தி லமைந்தது கருமம். அந்தக் கருமத்துக்கு காரணமும் பலனும் பந்தமாகவே யிருக்கின்றது. பந்தத்தினல் விளைவது துக்கமே யல்லாது சுகமல்ல. கருமத்தின் பலனெல்லாம் துக்கமாகவேயிருக்க,கருமத்துக்குப்பலனுகநீர்நன்மைகளைப் பயக்க முடியுமா,கருமத்துக்கு மேற்பட்டவர்கள் அடைய வேண்டியதும் அவர்களுக்கு நீர் கொடுக்கவேண்டியதும் ஒன்றுமில்லை. கருமத்தின் பலனுக நீர் கொடுப்பதெல்லாம் துக்கமாகவே யிருக்க அஞ்ஞானத்தினல் தேகிகள் சிலவற்றை மட்டும் துக்

கம் போலவும் மற்றதெல்லாம் சுகம் போலவும் பாவிக்கிறார்கள்.

[யமன்] [மனதுக்குள்] நான் வெகுகாலம் கொண்டிருந்த செருக்கானது இன்றுதான் அடங்கிற்று. இந்தப் பெண்மணி உரைத்தபடி கருமமெல்லாம் பந்தத்தினால் விளைவதாகவும் கருமத்தின் பலனெல்லாம் துக்கமாகவுமிருப்பதால் தேகிகளுக்கு நான் கொடுப்பதனைத்தும் தண்டனையே தவிர சுகமாகுமா?

[பிரகாசம்] துமதசேனனுடைய குலத்தின் விளக்கே, இவ்வளவறிந்த நீ எனக்கு விதிக்கப்பட்டிருக்கும் வினையை அறியாயா? அநாதியாயுள்ள கட்டளைப்படி நான் செய்ய வேண்டியதற்கு பதிவிரதையாகிய நீ இடையூறு செய்யவொண்ணாது.

[சாவித்திரி] தன் உயிரிருக்கத் தன் கணவனுயிரை அந்தகனாகிய உமது கையில் ஒப்புவிக்கின்றபேதை பதிவிரதையாவளா. அவளுக்குக் கணவனே உயிரல்லவா. அவ்வுயிர் போன பிறகு ஒரு பிணம்போல அவளிருப்பதிற் பயனென்ன.

[யமன்] கண்மணி பதிவிரதமென்பது என்ன, அது எத்தனை விதமாக உலகத்தில் அனுஷ்டிக்கப்படுகின்றது.

[சாவி] பெருமானே, சர்வாந்தர்யாமியாகிய நீரென்னைப் பரீட்சிக்கின்றீர். இகத்திலும் லோகாந்திரங்களிலும் சகல கருமங்களுக்கும் காரணமும் காரியமும் கணவனே என்று மனதிற்கொண்டு அவ்வாறு நடப்பது பதிவிரதம், முக்குணங்களின் பான்மையினால் அந்த விரதம் மூன்றுவிதமாக பேதிக்கப்படுகிறது, சகல சுகங்களுக்கும் கணவனே காரணமென்று நினைத்து அச்சுகங்களை நாடி அவனுடலிலும் அவ்வுடலுக்குரிய பொருள்களிலும் பிரேமையுடன் நடப்பவள் தாமசபதிவிரதை. அவளுக்கு ஆத்ம சுகானுவர்த்தினி யென்று பேர். அவளுக்கும்

அவள் கணவனுக்கும் இவ்வுலகத்துக் கப்புறம் சம்பந்தமே கிடையாது. சகல சுகங்களும் கணவனுக்கே உண்டாகவேண்டுமென்று நினைத்து தான் அவைகளை தனக்காக நாடாமல் அவனறிவிலும் அவனறிவுக்கு இனிமையான விஷயங்களிலும் பிரேமையுடன் நடப்பவள் ராஜஸபதிவிரதை. அவளுக்கு பதிசகாதுவர்த்தினி யென்று பேர். அவளுக்கும் அவள் கணவனுக்கும் சுவர்க்கலோகபரியந்தம் சம்பந்தமுண்டு. சுகமென்பதே அக்ஞான கற்பிதமென்று அறிந்து தன்னுடைய நல்ல விருத்தியால் தன் கணவனை சங்கற்ப விகற்ப மில்லாதவனாகச் செய்து அவனுடைய ஞானத்திலும் அதற்கு இனிதான பரம்பொருளிலும் பிரேமையுடன் நடப்பவள் சாத்துவிக பதிவிரதை. அவளுக்கு சாத்வீ என்று பேர். அவளுக்கும் அவள் கணவனுக்கும் பிர்மலோகபரியந்தம் சம்பந்தமிருந்து பிறகு அவ்விருவர்களும் ஒரே சமயத்தில் மோட்சானந்தத்தை யடைகிறார்கள். சர்வேசுவரனே நானுரைத்ததில் குற்றமிருக்கில் பொருத்தருளவேண்டும்.

(யமன்) வாணிபோலும் சிறந்தவளே, உன் சொற்களெல்லாம் ஸாமகானத்தினும் இனிதாக யிருக்கின்றது. உன் புருஷனுடைய உயிர் தவிர வேறு ஒரு வரத்தை நீ கேட்டால் அதை அளிக்கின்றேன்.

[சாவித்திரி] பரஞ்சுடரே.

விருத்தம்.

வாடுமென்னுயர் மாமனும் மாமியும்
கேடகன்று சிறந்துல கெங்குமே
நாடி நோக்கிட நல்விழி தந்தினி
தோடு நீ யருள்வா யுயர் துய்யனே.

(யமன்) கண்ணே, நீ இச்சித்தபடி உன் மாமனுக்கும் மாமிக்கும் குறைவில்லாத விழிகளைக் கொடுத்தேன், சத்தியவானை விட்டுவிடு.

(சாவி) ஐயனே என் கணவனை விடுதலென்பது என் உயிர் விடுதலென்றே எனக்குப் பொருள்படுகின்றது. என்னுயிரை நீர் கைக்கொண்டால் என் கணவனுயிரும் உமது கைக்கு வந்துவிடும், தருமமே யுருவாகிய நீர் அந்தப்படியே செய்ய வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

(யமன்) பெண்ணே தர்மம், தவம், வைராக்கியம், துறவறம், இவைகளிற் சிறந்தவைகளெவை?

(சாவித்திரி) அறியாதவளாகிய என்னை மென்மேலும் சோதிக்கின்றீரோ. தருமத்திற் சிறந்தது பிறருக்குத் தீதுசெய்யாமை. தவத்திற் சிறந்தது மெய்யுரைத்தல். கிடைத்தது போதுமென் றுன்னுவதே சிறந்த வைராக்கியம். விதித்தனவாறு கருமங்களைப் புரிந்து பலன்களை நாடாதிருத்தலே உயர்ந்த துறவறம்.

(ஆனந்தம் அபிநயித்து).

(யமன்) கிளியே உன் வாயால் வருவதெல்லாம் வேத வசனமா யிருக்கிறது, நீ உன் கணவனுடைய உயிரைக் கேளாமல் பின்னுமோர் வரத்தைக் கேள்.

[சாவித்திரி] கருணாநிதியே.

வெண்பா.

பொய்யா வென் மாமன் புவியிற்கொருபதியாய்
உய்யாருயிர் கடனை ஓம்பி—மெய்யினொடு
நாளுமவனுடைய நன்னாட்டினைச் சுகமா
யாளவெனநீ யருளுவாய்.

[யமன்] கற்புநிறைந்தகண்மணியே. நீவினவினபடி உன் மாமனாகிய துமதசேனன் அவனுடைய நாடாகிய சால்வதேசத்துக்கு மன்னனாகி மற்றெல்லா அரசர்களும் வணங்க முடிதரித்து வெகுநாளிருந்து பினபு முக்த்தியையும்பெருவன். இனியாகிலும் சத்தியவானை விட்டுவிடு.

[சாவி] உம்மையறிந்தவர்களே வேதம் அறிந்தவர்கள், சாதுவாகிய உமது சங்கம் கிடைத்தவருக்கு ஏதுகுறையுண்டு. இன்னும் என்னைச்சோதியாமல் என்னுயிரை நீர் முதலிற்கைக் கொண்டு பிந்தி என்கணவனுயிரைக் கொள்ளவேண்டும்.

[யமன்] பெண்ணே. சாதுசங்கமென்பதென்ன? அது எத்தன்மையுடையது அதின் பிரயோசனமென்ன?

[சாவித்திரி] சர்வக்ஞனாகிய உமக்கு நான் ஞாபகப்படுத்துவது தவிர புதிதாக அறிவிப்பது என்ன இருக்கிறது. சங்கமென்பது பற்று. சாதுசங்க மென்பது இந்திரியங்களையும் அவைகளின் விஷயங்களையும் ஒழித்தவர்களின் உறவு. அது அக்ஞானத்தின் பயனாகிய துக்கத்தைப் போக்கும் தன்மையுடையது. அந்த உறவானது ஸ்பர்ச வேதிபோல் சாதுக்களை அடுத்தவர்களும் சாதுக்களாகும்படி செய்கின்றதுமல்லாமல் பிரமாகீட நியாயமாகவே அவர்களுக் கியற்கையில்லாது வாசனையினால் மட்டும் அமைந்த அநித்திய ஸ்வரூபம் விலகி அவர்களுடைய வாஸ்தவமான நிகதிய ஸ்வரூபத்தை அவர்களடையும்படி செய்கின்றது.

[யமன்] மாதுசிரோமணி மென்மேலும் உன்வசனங்கள் கருணையையும் சந்தோஷத்தையும் உண்டுபண்ணுகின்றன உன் கணவனுயிர் தவிர இனனொருவரத்தை நீகேட்பாயாக.

[சாவித்திரி] பக்தவற்சல,

விருத்தம்.

தென்னிலத்தமரர்போற்றும் செல்வனேமிகவும்கோற்றே
என்னையீன்றருளுந் தந்தைக் கினியவோர் மகவுண்டாகித்
துன்னிடும் வாய்மைவீரம் துலங்கிடவிருந்தவற்குப்
பின்னுமக்குலம்மேலாகப் பெருகிடவருள்செய்வாயே.

[யமன்] அருந்ததிக்குஞ் சிறந்தவளே, நீ விரும்பினபடியே உன்தகப்பனுக்கு அழகும், சத்தியமும், சௌரியமும்,

# 6-வது அங்கம்.

ஆயுளும், கீர்த்தியும் நிறைந்தஒருமகன் பிறந்து வாழவும் அவனுக்குப்பின்னும் நீபிறந்தகுலம் எந்நாளும் தழைக்கவும் வரம் கொடுத்தேன். இனிஎன்னுடைய வேலைக்குத்தடையன்றி சத்தியவானை நீவிட்டுவிட்டு விலகிப்போ.

[சாவி] கிருபாசமுத்திரமே, என்கணவனை விட்டிருந்தால் உன் அருள் எனக்குக்கிடைத்திருக்குமா? கணவனைக்காட்டிலும் ஒருகுலமகளுக்கு வேறுதெய்வம் உண்டோ? இப்புவனமானது அக்ஞானமென்னும் அந்தகாரம் நிறைந்தகாடு. அதில் காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம், என்னும் ஆறுதிருடர்கள் அங்குவரும் மாந்தர்களுடைய விவேகமென்னும்பொருளைப்பறித்தோடுகின்றார்கள். தீனர்களைக்காப்பாற்றும் கருணை உன்னிடத்திலிருந்தாலும் பழவினையென்னும் பிரதிபந்தகமானது இடர்வந்தபோது வருந்துவோர் உன்னைக் கூவவொட்டாமலும் கூவினாலும் உன் அருள் அவர்களுக்குக் கைகூடவொட்டாமலும்செய்கின்றது. அந்தப்பிரதிபந்தகத்தை முதலில் அகற்றுவதற்கு குருவின்கடாட்சம் வேண்டியிருக்கின்றது. மாதர்களுக்குக்கணவர்களேகுரு. ஆகையால்கணவனை ஒழித்த மாதுமணம் ஒழிந்தமலர்போலும் ஒளியொழிந்த கனகம் போலும் உயிரொழிந்த உடல்போலுமாவாள் - உன்அருள்பெற்ற எனக்கு அந்தக்கதியும் வருமோ?

[யமன் மனத்துள்] அட! இனிஎன்னசெய்யத்தக்கது? இம்மாதோ ஒப்பற்ற பதிவிரதையாயிருக்கிறாள். அவளுடையகற்புக்கும் சீலத்துக்கும் இந்தமூன்று உலகங்களையும் அவளுக்குக்கொடுத்தாலும் அவை போதாதவைகளாயிருக்கும். எனக்குஇடப்பட்டிருக்கும் ஆணைப்படி நான் நடக்கவேண்டியதாயிற்றே.

[பிரகாசம்] பெண்ணே நீகேட்டவரங்களையெல்லாம் அளித்தேன். சத்தியவானுடைய உயிரைவிடுவதற்கு முடியாது. எப்படியாவது என்வேலையை நான் நடத்தவேண்டியதாகையால் இதோ என்னுடைய பாசத்தைப்போட்டு உயிரை வாங்குகிறேன். [என்று பாசத்தை வீசுகிறான்.]

[சாவித்திரி உடல் நடுங்கி]

[விருத்தம்]

பாச மற்றவள் யானெனிற் பான்மையாய்
மாசிலா னெனி னென்மணவாளனே
பேசும் வாய்மைய னென்கிலென்மாமனும்
வீசு பாச மறுந்திட வீழ்குமே.

(மடமடவென்றும் சப்தத்தோடு காலபாசமானது அறுந்து விழுந்தது. மழை பொழிந்ததுபோல சாவித்திரியின் மேல் மலர்கள் சொரியப்பட்டன. இதுகண்டு

(யமன்) நீதியேயுருவாயிருக்கும் குயிலே, உன் ஞானமும் குணமும் அற்புதங்களாயிருக்கின்றன. உன் புண்ணியமும் அளவற்றதாயிருக்கிறது.

(சாவித்திரி) நீரே மூவரும் ஒருவராயமைந்த மூர்த்தி

(விருத்தம்)

நீய ளித்தன வாற்பய னென்னவாம்
ஆயு மென்மண வாளனுக் கென்னிடம்
சேயி லாவிடில் வாய்திறந் தேயருள்
வாயெ னக்கொரு மைந்தனுஞ்செல்வியும்.

[திரைக்குள்பலர்கள் கூடி]

தீர்க்க சுமங்கிலீபவ!
தீர்க்க சுமங்கிலீபவ!!
தீர்க்க சுமங்கிலீபவ!!!

[என்னும் ஒலிகளுடன் மலர் மழை பொழிந்தார்கள்]

[யமன்] பெண்ணே. பதிவிரதத்தைக் குறையில்லாது அனுஷ்டிக்கும் மாதர்களுக்குக்கிடையாதது ஒன்றுண்டோ. இதோ பார்! ஆகாயத்தில்சகலதேவர்களும் ரிஷிகளும்சேர்ந்து உன்னை ஆசிர்வதித்து உன்மேல் மலர்மழை சொரிகின்றார்கள்.

..ளன, சகல குணங்களும் பொருந்திய கலைமகளென்று நினைக்கிறேன். உனக்கு நான் கொடுப்பது என்ன இருக்கிறது. உன் கணவன் நிறைந்த உயிரையும் பெறுவான். நீயும் நித்திய சுமங்கிலியாய் உலகத்திலுள்ள மாதர்களுக்கு வழிகாட்டும் குருவாயிருக்கக்கடவாய், உன் மணவாளனுக்கு உன்னிடம் ஸ்ரீதரன்போல ஒரு புதல்வனும் உமையவள்போல ஒருபுதல்வியும் உண்டாய் வாழ்வார்கள். நீ சகல பாக்கியங்களுடன் வாழ்ந்திருந்து பிறகு நீயும் உன் கணவனும் சாசுவதமான பதவியை அடைவீர்கள். பதிவிரதம் மேன்மை பெற்றது. நானும் உன்னால் பெருமையடைந்தேன்.

(விருத்தம்)

வேத னுக்குவன் மாலெது மோம்புவன்
பூத னுத னழித்திடும் பூவையர்
நீதி மூவினை யுஞ்செயு மாதலால்
மாதர் கறபை நினைந்து வணங்குவாம்.

[மறைதல்]

[சாவி] [யமன் முன் நின்ற இடத்தைப்பார்த்து அஞ்சலி செய்து]

[தியானித்து]

அம்மணி. உன் அருளின் வலிமையால் யாவும் பெற்றேன்.

[கலித்துறை]

தொட்டாற் பிடித்திட்டிழுக்குமையோவினைசூழ்புவியான்
விட்டாலுமம்மைதனை விட்டிடுமோவதில் மெய்ம்மறந்து
கெட்டாலும் நின்திரு வாசல்வந்தே கிடப்பேனங்கடி
பட்டாலும் யானகலேன் வெறுத்தாலப் பழியுனக்கே.

(சத்தியவான் முகத்தைபார்த்து)

நாயக, உனக்கு இப்போது தலைவலி தீர்ந்துவிட்டதா?

(எழுந்திருந்து)

[சததி] கண்ணே. என் தலைவலி தீர்ந்துவிட்டது. நான் மிகுந்தகாலம் தூங்கினேனல்லவா. நான் தூங்கும்போது ஒரு கரியநிறமுடைய புருஷன் உன்னைச்சுற்றிவந்து வணங்கிச்செல்ல ஒரு கனவு கண்டேன். இதென்ன எங்கும் புதுமையான மலர்கள் சிதறிக்கிடக்கின்றன. மிகுதியான காற்று அடித்ததினாலோ அப்படிச் சிதறியிருக்கின்றன. நாம் செல்லுவோமா?

(சாவி) (சத்தியவானைத்தழுவி)

துன்ப மாங் கடலைக்கடந் துய்தனம்
உன்பெ ருந்தவ மின்றுரு வானது
பின்பி யாமடை யாவரும் பேறிலை
அன்ப நீயமர் வாய்சிறிதிங்ஙனே.

(சத்தியவான் மனத்துள்) என் தலைவலி தீர்ந்ததுக்காக சாவித்திரி இவ்வளவு சந்தோஷப்படுகின்றாள்.

(பிரகாசம்) நாம்போம் வழியில் மலர் கொய்துகொள்ளுவோம். காலம் மிகுதியாய்க் கழிந்துவிட்டபடியால் இனி நாமிங்குதாமதம் செய்யக்கூடாது.என் களைப்பும் ஆறிவிட்டது நாம் புறப்படுவோம்.

(இருவரும் எழுந்து மறைதல்)

6-வது அங்கம் முற்றிற்று

## 7-வது அங்கம்.

[துமதசேனனும் அவன்மனைவியும் தோன்றல்]

[துமதசேனன்] சுசீலை, இதென்னபுதுமை. நம்மிருவருக்கும் ஒரேசமயத்திற் கண்கள் தெரிகின்றனவே., அப்படியானதற்குக்காரணம் தெரியவில்லை.

[சுசீலை] நாத, இன்றுகாலையில் நமது கண்மணியாகிய சாவித்திரி நம்மைநோக்கி நீங்கள் என்னைப்பார்க்கவும் உங்கள் புதல்வன் நிறைந்த ஆயுள் பொருந்தியிருக்கவும் நான்பெற்றால் அதுவே நான்செய்யும் பணிவிடைகளுக்குப்பலனாகு"மென்று

உரைத்தாள். அப்பொழுதே எனக்குக் கண்கள் கிடைத்தன போல் நினைத்தேன். உடனே அந்தச்செல்வியையும் நமது செல்வனையும் பார்ப்பது அல்லவோ இந்தக்கண்கள் கிடைத்த தற்குப்பலனாகும். அவர்கள் இன்னும்வரவில்லையே. அவர்களை நோக்கும் வகையில் இந்தக்கண்களாற் பயனென்ன.

(விருத்தம்)

அகமுற முதல்வன் நாம மறைந்திடா நாவும் பண்பால்
தகுமெளி யோர்க்கு நல்காத் தனமுறல் வினைய கற்றத்
திகையுமோ ருடலும் போலச் சிநதையிற் கினிய ராமெம்
மகளொடு மகனை நோக்கா வன்கணு லாவ துண்டோ

(துமத) சுசீலை, பகல்முழுதும் அநேகமாய்க்கழிந்துவிட்டது. குழந்தைகள் இன்னுமவரவில்லை. தினந்தோறும் பன்னிரண்டு நாழிகைக்குள் சத்தியவான்வந்து விடுவது வழக்கமல்லவா? அவர்கள் ஒருகுறைவையும் பெறாது வந்துவிட்டால் அதுவேஎனக்காயிரங்கண்கள்கிடைத்தனபோலாகும் அவர்களில்லாத நேரத்தில் இக்கண்களாலொருபயனுமில்லை. நீ மிகவும்மதியிற் சிறந்தவளல்லவா? அவர்கள் இன்னும் வராததற்கு என்னகாரணத்தை யூகிக்கின்றாய்?

[சுசீலை] நாத, நேற்று இரவில் யான் கண்ட கனவுகள் நற்பலன்களையே பயக்கும் அல்லாது நமக்கு யாதொரு துன்பத்தையும் கொடாது. ஒருபெரிய கருநாகமானது நமதுசத்தியவானுடையகழுத்தில்சுற்றிக்கொண்டிருக்க அதைச்சாவித்திரிகோபித்துப்பார்த்தவுடன் அது எரிந்து சாம்பலாகி உதிர்ந்துவிடவும் சாமளவர்ணமுடைய ஒருமாது அங்குவந்து கற்பகமலரா லமைந்த இரண்டு மாலைகளை அவர்களுக்குக் கொடுக்கவும் அந்தமாலைகளை அவர்கள் ஒருவர் கையால் மற்றொருவருக்கிட்டு இருவரும் அணிந்துவிளங்கவும் கனவு கண்டேன். இதனால் சகலமங்களங்களும் அவர்களை அடையுமென்பதிற் சந்தேகமில்லை.

மேலும் (விருத்தம்)

நாயகா வந்தச்செல்வி நம்மனை புகுந்த நாள்தொட்
டாயுநற் றவமே லாகி யன்பொடு பெரியோர் நட்பும்
தூயநம் மனத்தின் மேலாஞ் சுகமுமே யடைந்தோ மந்தச்
சேயவள் கற்பால் நம்மைத் தீமையொன் றணுகி டாதே.

[சத்தியவானும் சாவித்திரியும் தோன்றல்]

[சத்தியவான்] கண்ணே. இதென்ன ஆச்சரியம். கண்ணில்லாதவர்களாய் எந்நாளும் மனைக்குளேயிருந்த என்னுடைய அன்னையும் பிதாவும் கண்களுடன் வெளியில்வந்து எல்லாப்பொருள்களையும் பார்க்கின்றார்களே.

[சாவித்திரி] இதெல்லாம் உன்னுடைய தவத்தின்பலன். இன்று நாம் இன்னும் எத்தனை ஆச்சரியங்களையோ பார்க்கப் போகின்றோம்.

[இருவரும் துமதசேனனையும் சுசீலையையும் வணங்குகிறார்கள்]

[அவ்விருவரும் சத்தியவானையும் சாவித்திரியையும் மாறி மாறித்தழுவி]

[துமதசேனன்] என் பிராணனைப்போன்ற குழந்தைகளே, இந்நாள்வரை உங்களைப்பார்க்க எங்களுக்குப் பாக்கியமில்லை.

(சத்தியவானைத்தொட்டு)

ஐய, உன்னெழிலும் [சாவித்திரியைத்தொட்டு]

புகழும்மணி
செய்யபூமகளொக்கும்
உன்றேகமும்

(இருவரையும் பார்த்து)

கையும்மெய்யுமினையால்
முனம்கண்டிலம்
மையில்வேலனும்
வள்ளியும்போல்நீர

## 7-வது அங்கம்.

[சுசீலை] (குழந்தைகளை மறுபடியும் தழுவி)

என் கண்மணிகளே, ஏன் இவ்வளவு தாமதம். பாதை தவறி நடந்தீர்களோ. ஒருகால் சாவித்திரி நடக்கமுடியாமல் மார்க்கத்தில் இருவரும் இருந்துகளைப்பாறினீர்களோ ?

(சேவகன்றோன்றல்)

(சேவ) சாலவதேசத்து மந்திரியாகிய சுமதிவருகின்றான்.

(சத்தியவான்] மந்திரிக்கு இங்கென்னவேலை? சாவித்திரி, நடக்கப்போகிறதாக நீ சொன்ன ஆச்சரியங்களில் இது ஒன்று போலிருக்கின்றதே. உன் அறிவு மிகவும் அற்புதமாயிருக்கின்றது.

[சுமதி தோன்றல்]

துமதசேனனை நோக்கி.

(சுமதி) பொய்யுரையாத கோமானே, இன்று உமது திருமுகத்தைப் பார்த்தபின்புதான் என்கலியானது விலகிற்று.

(சுசீலையை நோக்கி.)

அம்மணி, இது நீர் வசிக்கும் காடாகையால் மாதமும்மாரியினால் சகல உயிர்களும் மரங்களும் செழிப்பாய் வளர்கின்றன.

(இருவரையும் வணங்குகிறான்.)

(துமதசே) சுமதி, உனக்கு மங்களம் உண்டாகட்டும். இந்நாள்வரை எவ்விடத்திலிருந்தாய்?.

(சுமதி) நானிதுவரையில் விந்திய பர்வதத்திலிருக்கும் ஒரு காட்டில் மறைந்துகொண்டிருந்தேன். நமது நாட்டினர் சிலர் அங்குவந்து நமது நாட்டைக் கவர்ந்திருந்த சைந்தவ மன்னன் ஒரு புலியாற் கொல்லப்பட்டு இறந்துவிட்டதாகவும், அவர் மந்திரிமார்களும் மற்றவர்களும் சிந்து நாட்டுக்குப் போய்விட்டதாகவும் தேவரீரை நமது நகரத்துக்கு அழைத்து

வந்து முடிசூட்டிவைக்க வேண்டும் என்றும் சொன்னார்கள். அவர்களெல்லாரும் பிந்தி வருகின்றார்கள். அவ்விதமே தேவரீர் வந்து முடிதரித்து எல்லா உயிர்களையும் பாதுகாக்கவேண்டும்.

(நாரதர் தோன்றல்.)

(நாரதர் விருத்தம்.)

தென்புலத் தவர்கள் மூவர் தேவர்கள் அதிதி ஒக்கல்
அன்பொடு தானிவ்வாறும் ஐவகைப் பூசை மின்னார்
தன்புகழ் வினையா லோங்கித் தரித்திடு மெங்கில் வேதம்
பின்பவர் மகிமை யல்லால் பேசுமோ வெதையும் மேலாய்.

(அவரை அனைவரும் வணங்குகிறார்கள்.)

(சாவித்திரி நாரதரை வணங்கி.)

ஐயனே, உம் அருளால் எல்லா நன்மைகளையும் பெற்றேன். நான் என்றும் உம் திருவடியை மறவாதிருக்கும்படி அருள் செய்யவேண்டும்..

(நாரதர் சாவித்திரியைக் கட்டித்தழுவி.)

கண்மணியே, மங்களங்களெல்லாம் உனை யடைந்தே சிறப்புற்றன. பதிவிரதம் என்னும் தர்மமும் இன்று உன்னா பெருமைபெற்றது.

[துமதசேனனை நோக்கி,]

அரசனே, உனக்கு மருமகளாக வந்திருக்கும் சாவித்திரி அந்தக் கலைமகளென்றே நினைக்கவேண்டியது. இன்று காட்டில் உன் மகனுடைய உயிர்கொள்ளவந்த யமனும் அவளுடைய கற்புக்கு அஞ்சி உன் மகனுக்கு நிறைந்த ஆயுளும் கொடுத்து உனக்கும் உன் மனைவிக்கும் கண்களை அளித்து உனக்கு நாட்டினையும் உன் மகனுக்குப் புதல்வனையும் அளித்துச் சென்றனன். இக்கண்மணியால் நீ இகத்திலும் பரலோகத்திலும் ஒப்பில்லாத சுகத்தைக் கைக்கொண்டாய்.

(சுசீலை) [சாவித்திரியை மடிமேற்றூக்கி]
என் கண்ணே. நடந்ததை உன் திருவாயால் உரைசெய்வாயாக.

[சாவித்திரி] அம்மணி. நான் ஒன்றுமறியேன் இந்த நாரதமகாமுனிவருடைய வரத்தினாலும் தங்களுடைய கிருபா கடாட்சத்தினாலும் இன்று சகலவிதமான பாக்கியங்களையும் பெற்றேன்.

[விருத்தம்]

அங்குறும்கிழியுன தன்பணிற்
றங்கு நல்லுயிரும் புறத்தாட்சியும்
மங்கிடா மகவும் நடுவன்றர.

[நாரதனைக்காட்டி]

இங்கிருந்திடு தூயரியற்றினர்.

[சத்திய] என்னுயிர்க்குயிரே நீ மூன்றுநாள் உபவாசமிருந்ததும் இன்று என்னுடன் நீ காட்டுக்கு வந்ததும் வரும்போது சகுனத்தைப்பார்த்து மனஉறுதிகொண்டதும் அடிக்கொருதரம் என்னைத்தழுவி வருத்தத்தோடு கண்ணீர் விட்டதும் இப்போது இன்ன காரணத்தினலென்று புலப்படுகின்றது. அட மரத்தின்மேல் நான் பார்த்த மூவர்கள் யமதூதர்களா? என் கனவில் உன்னை வணங்கிச்சென்றவன் யமதேவனா! என்ன ஆச்சரியம்.

[துமதசேனன்] என் குலத்தின் விளக்கே!

(விருத்தம்)

(சத்தியவானைக்காட்டி)

கண்கொடுத்தனை இவ்வுயிரீன்றனை
மண்கொடுத்தனை யுன்னுயர்பண்பினல்
விண்கொடுத்தனையென்றுமுன்றன்னையெம்
ஒண்குலத்துயர் தெய்வமென்றுன்னுவாம்.

[சுசீலை] [சாவித்திரியைத்தழுவி] பதிவிரதா ரத்தினமே!

[விருத்தம்]

கற்ற மாதவர்கட்கு முயர்ந்துமேல்
உற்ற கற்புநிறைந்துயரென்மகற்
கற்ற நல்லுயி ரீன்ற அணங்குனைப்
பெற்ற வர்க்கிடு வோம்பெரு வந்தனம்.

[நாரதர்] துமதசேன. காட்டில நடந்த விர்த்தைகளை யெல்லாம் சாவித்திரி உனக்கு விஸ்தாரமாகச்சொல்லுவள். நீ உன் நாட்டுக்குச்சென்று முடிதரித்து அரசாட்சிசெய்து நீங்கள் அனைவரும் சுகமாயிருப்பீராக.

சாவித்திரி! எல்லா பாக்கியங்களையும் அடைந்த உனக்கு நான் என்னவரம் அளிக்கவேண்டும்.

[சாவித்திரி] கருணைக்கடலே.

(விருத்தம்)

பற்றி என்கதை பாடுவர் கேட்பவர்
உற்ற நன்மக வோடுயர் செல்வமும்
கற்ற கல்வியும் மெய்யறமும் கடை
பெற்று வாழ்ந்திடு வாரெனப் பேசுவீர்.

[நாரதர்] அப்படி வாழ்வார்கள்.

(அனைவரும் மறைதல்)

இது பரத வாக்கியம்.

சபையார்களே! பதிவிரதத்தின் மகிமையை நன்றாய்ப் பார்த்தோம். பின்பு துமதசேனன் முடிதரித்தரசாண்டு சுசீலையுடன் திவ்வியலோகஞ்சென்றான். அசுவபதிராஜனுக்கு அழகு பொருந்திய புதல்வன் பிறந்து அவன் குலத்தை மேலாகச் சிறப்பித்தான். சத்தியவானுக்கும் சாவித்திரிக்கும் தர்மபிருத் என்னும் குமாரனும் புலோமஜை என்னும் புதல்வியும் பிறந்து அக்குலமும் எந்நாளும் வாழ்ந்தது. சாவித்திரியும் சத்தியவானும் வெகுநாள் உலகிலிருந்து வாழ்ந்து கடைசியில் ஒப்பற்ற பதவியை அடைந்தார்கள்.

பார்த்தீர்களா ! பதிவிரதத்துக்கு யமனும் பயந்து வணங்கினன். பதிவிரதத்துக்கு மேலான விரதம் ஒன்றுமில்லை. பதிவிரதத்தை அநுஷ்டிக்கத் தெரியாத மாதர்கள்தான் மற்ற விரதங்களைநாடி அலைகிறார்கள்.

ஆதலாற்றான்,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை" என்றும்

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்" என்றும்

நீதிவசனங்கள் பிறந்தன.

மங்களம்.

---

பதிவிரதா பரம்மியம்

முற்றிற்று.

# பிழைதிருத்தம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | *த | பதிவிரத | பதிவிரதா |
| 2 | க | அல்லவே | அல்லன் |
| 3 | த | பதிவிரத | பதிவிரதா |
| ,, | 7 | அப்படியல்ல | அப்படியன்று |
| ,, | 25 | மன்துக் | மனத்துக் |
| 4 | 15 | கலமல்ல | கலமன்று |
| ,, | 16 | அனுகரிக்கும் | அநுகரிக்கும் |
| ,, | 17 | யானமல்ல | பானமன்று |
| 5 | த | பதிவிரத | பதிவிரதா |
| 6 | 2 | ஏன்னும் | என்னும் |
| ,, | 19 | உத்திரவு | உத்தரவு |
| 7 | த | பதிவிரத | பதிவிரதா |
| 9 | 8 | மனதினிக் | மனதநினிக் |
| ,, | 17 | பயன்ற | பயந்த |
| 11 | 3 | பாாத்நு | பாாத்து |
| ,, | 11 | கொளிந்தனன் | கொளித்தனன் |
| ,, | 26 | வசஞ்செய்ய | வாசஞ்செய்ய |
| 13 | 1 | குழலபெண் | குழற்பெண் |
| 14 | 1 | வநதால் | வந்தால் |
| ,, | 10 | செயவதற்கு | செய்வதற்கு |
| 18 | 9 | வைதீகம்வேடம் | வைதிகவேடம் |
| 19 | 6 | யாவரையும் | மாவரையும் |
| 20 | 18 | துயர்வான் | தொடர்வான் |
| ,, | 19 | ஐயய்யோ | ஐயையோ |
| ,, | 21 | திலேயோயெப் | திலேயோவெப் |
| 24 | 14 | துயர்ந்து | தொடர்ந்து |
| 26 | 3 | சொல்படி | சொற்படி |
| 28 | 19 | வியசனம் | விசனம் |
| 30 | 21 | பொருதும் | பொருந்தும் |
| 33 | 16 | இருவர்களும் | இருவரும் |
| ,, | 21 | உத்திரவு | உத்தரவு |
| 35 | 9 | கீாத்தி | கீர்த்தி |
| 37 | 24 | தானிணைப்பாளா | தானிணையான்பார் |
| 38 | 6 | பொருமை | பொறுமை |
| ,, | 15 | முன்பரல் | முன்பால் |
| 40 | 7 | இன்னம் | இன்னும் |
| ,, | 11 | பொருளிளந்தோர் | பொருளிழந்தோர் |
| ,, | 14 | சந்திரமதி | சத்திரபதி |
| 42 | 28 | சமுதிரமும் | சமுத்திரமும் |
| 44 | 24 | கந்தனமும் | சந்தனமும் |
|  | 27 | பொரிபோல் | பொறிபோல் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 46 | 8 | ையயராதன்று | கையராதன்று |
| 48 | 2 | யீதுணை | யீதுனை |
| ,, | 12 | யெறிகின்றதா | யெரிகின்றதா |
| ,, | 16 | லரன்தலை | லரன்றலை |
| ,, | 21 | அவ்விருவர்களும் | அவ்விருவரும் |
| 49 | ,, | மறையுஞ் | மரையுஞ் |
| ,, | 26 | பதருகின்றது | பசறுகின்றது |
| 50 | 3 | உத்திரவு | உத்தரவு |
| ,, | 5 | உத்திரவு | உத்தரவு |
| ,, | 20 | லுமொடு | லும்மொடு |
| 51 | 9 | பொருமை | பொறுமை |
| ,, | 17 | யெனவாமவர்கண் | நிகர்வாரவர்கண் |
| ,, | 18 | நட்பதுவொன்றில்லாவிடில் | நட்பிலையென்கிற்சிறிதென்னும் |
| 52 | 1 | மாதர் | மாந்தர் |
| ,, | 4 | எனகுத் | எனக்குத் |
| ,, | 16 | ஒரு | ஒரு |
| 53 | 5 | க்களிறேய் | ப்பிடியேய் |
| ,, | 9 | என்க்கென்ன | எனக்கென்ன |
| 54 | 8 | மெள்ள | விள்ளும் |
| ,, | ,, | செய்யம் | செய்யும் |
| ,, | ,, | மின்னுன் | மின்னுள் |
| ,, | 21 | அன்றமை | அன்றமையும் |
| ,, | 24 | காயின்னம் | காயின்னும் |
| ,, | 28 | மனறவி | மன்றவி |
| 55 | 14 | கொடிகயின் | கொடியின் |
| ,, | 20 | மீதில்ாலத | மீதில்லாத |
| 56 | 15 | செனறு | சென்று |
| ,, | 18 | கண்ணல்ப்பார் | கண்ணற்பார் |
| ,, | 20 | கண்ங்களே | கண்களே |
| ,, | 23 | எங்றந்தையே | என்றந்தையே |
| ,, | 24 | யெங்கு | எங்கு |
| ,, | 25 | விகக்குணம் | விச்குணம் |
| 57 | 16 | பாவன் | பாவர் |
| ,, | ,, | சௌாவத்தை | கௌரவத்தை |
| 60 | 14 | யாகயிருக்கில் | யாகவிருக்கில் |
| ,, | 15 | நியாய அன்று | நியாய்மன்று |
| 64 | 22 | தோற்றுகின்றுது | தோற்றுகின்றன |
| 65 | 5 | மீறோர் | மீண்றோர் |
| ,, | ,, | மாயந்தே | மாய்ந்தோ |
| ,, | 7 | மனதுவக்கும் | மனமுவக்கும் |
| 66 | 19 | எனங்களு | எங்களு |
| 68 | 21 | பிரர்களை | பிறர்களை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 69 | 22 | [illegible]வே | தாழ்வு |
| ,, | 25 | [illegible]த்திருந்தபோது | கோபித்திருந்தபோது |
| 71 | 1 | அவனிடத்திலிருது | அவனிடத்திலிராது |
| ,, | 10 | சொல்லுவதறிது | சொல்லுவதரிது |
| ,, | [illegible] | ஆச்சரியமில்லை | ஆச்சரியமன்று |
| ,, | 17 | பொருமை | பொறுமை |
| 72 | 7 | உருதி | உறுதி |
| ,, | 11 | அவருறைத்த | அவருரைத்த |
| ,, | 21 | [illegible]ஞேடின்ஞன் | கேயஞேடிந்நான் |
| ,, | 23 | நினைநினைக்க | நினைக்க நினைக்க |
| ,, | 24 | பதருகின்றதே | பதறுகின்றதே |
| 73 | 22 | யெல்லாம | எல்லாம் |
| 79 | 25 | வினைக்கும் | வினைக்கு |
| ,, | 26 | கூருமோர் | கூறுமோர் |
| 81 | 5 | போதிக்க | பேதிக்க |
| ,, | 16 | அந்து | பூச்சி |
| 82 | 4 | பிரட்டனுக | புரட்டனுக |
| ,, | 6 | பிரட்டு | புரட்டு |
| ,, | 14 | தேரர் | தோர் |
| ,, | 19 | பிரண்டு | புரண்டு |
| ,, | 20 | எருக்கால் | ஒருகால் |
| 83 | 8 | பிரட்டி | புரட்டி |
| 84 | ,, | நிரைந்த | நிறைந்த |
| ,, | ,, | மனத்தருமாய்த்திட | வர்தேகியுந்தாம்பெரு |
| 85 | 7 | தண்டினை | தண்டனை |
| 86 | 11 | பொருத்தருள | பொறுத்தருள |
| ,, | 21 | தாயனே | தூயனே |
| [illegible] | [illegible] | [illegible]லவதேச | சாலவதேச |
| ,, | [illegible] | பெருவன் | பெறுவன் |
| 88 | 10 | உரவு | உறவு |
| ,, | 12 | உரவு | உறவு |
| ,, | 16 | நிதிய | நித்திய |
| ,, | 20 | இன்னொரு | மற்றொரு |
| 89 | 3 | தடையன்றி | தடையின்றி |
| 94 | 26 | யோல்வரே | போல்வரே |
| 95 | 20 | வணங்குகிருன் | வணங்குகிறுன் |
| 99 | 12 | பரம்பியம் | பாரம்பியம் |



# தியானக்கிரம விஷயம்



இங்கிலீஷ் பாஷையிலிருந்து

பென்ஷன் தாசில்தார் K. S. இராமசந்திர ஐயரால்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது

---

[பூர்ணசந்திரோதயமாபீசு கிளர்க்கு
B. S. ராமசுப்பையரால் பரிசோதிக்கப்பட்டது]

---

மதுரை பிரஹ்மஞான மந்திரத்தில் விலைக்கு வாங்கலாம்.

இதன் விலை அணா 4.

---

இது

மதுரை விக்டோரியா அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1916

# பூர்ணசந்திரோ

இது பிரதி ஆங்கில மாதமும் 30-ம் தேதி மதுரையில் பிரசுரமாகிவரும் தமிழ்ப்பத்திரிகை. நம்தேசத்தில் வடமொழி, இதர மொழிகளில் மஹான்களால் உபதேசிக்கப் பெற்றுள்ள உண்மைகளும், பிரஹ்மஞானசபையாரால் வெளிவந்துள்ள புத்தகங்களிலுள்ள உண்மைகளும் ஜனசமூகத்திற்குரிய பொதுவான தர்மங்களும் நீதி முறைகளும், சீர்திருத்தமுறைகளும் தக்க வித்துவான்களைக் கொண்டு வியாஸங்கள் ரூபமாய் இப்பத்திரிகையில் வெளியிடப்பட்டு வருகின்றன. பொதுவாய் ஜனங்களுக்கு ஞானம் பரவி அபிவிருத்தியாக வேண்டுமென்ற நோக்கத்துடன் இப்பத்திரிகை ஏற்பட்டதேயன்றி பணலாபம் சம்பாதிக்க வேண்டுமென்ற கருத்துடனன்று. பத்திராதிபரும் வியாஸம் எழுதுகின்றவர்களும் பண விருப்பமின்றி இனாமாக வேலை செய்கின்றார்கள்.

50 ரூபாய்க்குக் குறையாமல் நன்கொடை கொடுக்கிறவர்கட்குத் தங்கள் ஆயுள் காலமுழுமையும் பத்திரிகை பிரசுரமாகும் காலத்தில் மாசம் ஒரு பிரதி மறுபடி சந்தாப்பொறுப்பின்றி அனுப்பப்படும். வருஷசந்தா ரூபா 2 தான். பத்திரிகை வேண்டியோர் அடியிற்கண்டவரிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம். மானேஜர் பூர்ணசந்திரோதயம் பிரஹ்மஞானசபை, மதுரை.

---

## பிரஹ்மஞான ஸபை.

இது 1875௵ நவம்பர் மீ 17உ நியூயார்க்கு நகரில் உண்டாகி 1905௵ ஏப்பிரல் மீ 3உ மதராஸில் ஸ்தாபிக்கப்பட்டது. இதின் நோக்கங்கள்.

1. ஜாதி, மதம், பால், வர்ணம் இவ்வேற்றுமைகளின்றி, மநுஷ்ய வர்க்கத்தினரின் ஸர்வத்ர ஸஹோதர பாவத்தை அதிகரிக்க, அஸ்திவாரமாக அமைவது.

2. ஸமதர்சன புத்தியுடன் இதர மதங்களையும் தத்துவ சாஸ்த்ரங்களையும் பிரகிருதி சாஸ்த்ரங்களையும் ஆராய்வது.

4. இதுவரை மநுஷ்யனுடைய நேரான அறிவுக்கு எட்டாத பல பிரபஞ்சநியதிகளை வியக்தமாயுணர்வதற்குச் சாதனமாக, மநுஷ்யனிடத்தில் குப்தமாயுள்ள சக்திகளை விகஸிக்கச் செய்வது.

மநமானது எந்தெந்தக் கடவை அலைந்தலைந்து வெளியே செல்கின்றதோ, அந்தந்தக் கடவைகளிலும், மநத்தைக் கடிவாளம் போட்டு இழுத்து, ஆத்மாவின் வசப்படுத்தவேண்டியவர்களாயிருக்கிறோம். அக்கடிவாளங்கள் தான், இப்புத்தகத்திலுள்ள நற்சிந்தனைகள் என்றறிக.

இது அடையாறு தியஸாபிகல் பப்ளிஷிங் ஹவுஸ் மானேஜரவர்களுடைய அனுமதிபெற்று தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. இம்மொழிபெயர்ப்பில் பென்ஷன் சப் அஸிஸ்டண்டு இன்ஸ்பெக்டர் மகா-ள-ள-ஸ்ரீ T. S. லக்ஷ்மீநாராயண ஐயர் அவர்களால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கும் "சத்குருபாதங்களில்" என்ற புஸ்தகத்தை நான் உபயோகப்படுத்தியிருக்கிறேன். அதற்காக அவர்களுக்கும், இப்புஸ்தகத்தைத் தமிழில் மொழி பெயர்த்தலுக்கு அநுமதி கொடுத்த மேற்கூறிய பிரஹ்மக்ஞான புஸ்தகசாலை மானேஜர் அவர்களுக்கும், என்னுடைய மொழிபெயர்ப்பைப் பரிசோதனை செய்து அச்சுக்குக் கொடுத்து அச்சுப்பிரதியையும் தயவாகப் பரிசோதித்து லோக பூர்ணசந்திரோதய மாசிகைக்கு மகா-ள-ள-ஸ்ரீ B. S. ராமசுப்பையர் அவர்களுக்கும், ஷை பத்திரிகையில் முதலில் பிரசுரம் செய்யும்படியாக அநுமதி கொடுத்து என்னை இப்படிப்பட்ட வேலையில் தைரியப்படுத்தின அதன் பத்திராதிபரான மகா-ள-ள-ஸ்ரீ அ. ரங்கஸ்வாமி ஐயர் அவர்களுக்கும் நான் நன்றியுள்ளவனாகவிருக்கிறேன்

இதில் ஏதாவது அர்த்தப்பிழை, சொல்பிழையிருந்தால் அதைப்பற்றி தயவுசெய்து தெரிவித்தால் அடுத்த பதிப்பில் அப்பிழைகளுக்கிடமின்றி யிருப்பதற்கு ஏற்பாடு செய்யத் தயாராயிருக்கிறேன். நான் மொழிபெயர்ப்பதற்கு யத்தனித்ததில் இது முதலாவது யத்தனமாகையால் எப்படிப்பட்டபிழைகளையும் பொறுத்தருளும்படியாக, இப்புஸ்தகத்தை வாங்குபவர்களை வேண்டிக் கொள்ளுகிறேன்.

கே. எஸ். ராமசந்திர ஐயர்.

# தியானக்கிரம விவரணம்.

---

## ஜனவரி மாசம்.

மாசாந்தர அப்யாஸம்:-ஸர்வ வல்லமையுள்ள ஈசுவரன் உன்னிடமிருக்கிறார். அதனால், நீ தீவ்ரமாய் மட்டும் இச்சிப்பாயானால் உன்னால் செய்யமுடியாதது ஒன்றுமில்லை.

### வார அப்யாஸம்.

1-வது வாரம்:—ஈசுவரனுடைய அன்பின் பிரவாஹம் மனிதர்களை அடைதலுக்கு, நீ ஒரு வாய்க்காலாக அமையவேண்டி, ஈசுவரனுடன் ஐக்யமாக இச்சி.

2-வது வாரம்:—உன் சரீரம் எதையாவது அடைய விரும்பினால், நீ அதை யதார்த்தமாக விரும்புகிறாயா என்பதைக் கவனித்துப் பார். ஏனென்றால் நீ ஈசுவராம்சமான படியால், ஈசுவரன் எதைச் சிந்திக்கிறாரோ, அதைத்தான் நீயும் சிந்திப்பாய்.

3-வது வாரம்:—நாம் விகாஸ முறைக்கு அநுகூலமாகவிருக்கலாம். அல்லது தடங்கலாகவிருக்கலாம். ஈசுவர ஆக்ஞைக் குட்பட்டு நடக்கப் பாத்ரவானாகலாம். அல்லது அவரை யெதிர்க்கலாம்.

4-வது வாரம்:—ஈசுவர சைதந்யம் உன்னிடமிருப்பதுபோல், உன் அயலார்களாகிய சஹோதரர்களிடமு மிருக்கிறது. அவர்களிடமுள்ள அந்த ஈசுவர சைதந்யத்தை மலரச்செய்வதன் மூலமாகவே, அவர்களுக் குதவிசெய்து, அவர்களின் நிலைமையை உயர்த்த முயலுவாய்.

5-வது வாரம்:—ஸத், சித், ஆநந்தம் என்பவை ஸர்வேசுவரனின் மூன்று அம்சங்கள். ஈசுவரனுக்குத் தொண்டுபுரிய வேண்டுமென்று இச்சிப்பவர்கள், மேற்கூறிய அம்சங்களை யடைதற் கேதுவான கர்மம், பக்தி, ஞானம் என்ற மும்மார்க்கங்களையும் இவ்வுலகில் கடைப்பிடித்தல் வேண்டும்.

# தியானக்கிரம விஷயம்.

## திரஸரி அப்யாஸம்.

(1) ஈசுவரனுடைய அன்பின் பிரவாஹம் மனிதர்களை யடைதலுக்கு நீ ஒரு வாய்க்காலாக அமையவேண்டி, ஈசுவரனுடன் ஐக்யமாக இச்சி.

(2) ஈசுவரன் அன்பே யாதலால், நீ ஈசுவரனுடன் ஐக்யமாக வேண்டுவதற்கு, நீ தன்னயம் அற்றவனாகவும் அன்பு நிறைந்தவனாகவும் இருத்தல் அவசியம்.

(3) ஈசுவரனுடன் ஐக்யமாக இச்சித்தல் தான் ஸாதாரணமாய் அன்பென்று சொல்லப்படுகிறது. அன்பென்பது இச்சையென்று மட்டும் சொல்லுதல் அவ்வளவு பொருந்தாது. ஆனால் அதைத் திடசங்கற்பம் (உறுதியான நிர்மானம்) என்றே சொல்லலாம்.

(4) அன்பு என்பது ஈசுவரனுடன் எப்போதும் ஒருமையுணர்வைக் கொள்வதன் மூலமாய், அதாவது அநந்யபாவத்தைக் கொள்வதன் மூலமாய், ஈசுவர ஸங்கல்பத்தின்படியே நாமும் திடசங்கற்பங் கொள்ளுதலாகும். அவரிடத்துள்ள பேரன்பினால், அவர் செய்வதைப் போலவே நீயும் செய்வாய், அவரைப்போலவே நீயும் நடப்பாய்.

(5) மேன்மார்க்கத்திலுள்ள ஒருவன் ஈசுவரன் கையிலுள்ள பேனாவாகிறான். அவன் மூலமாகவே ஈசுவரனுடைய எண்ணம் வெளிப்படுகிறது.

(6) அன்பு மேலிட்டு மேன்மார்க்கத்தில் ஒழுகுகிறவனை, ஈசுவரனின் அன்பாகிய ஒளியை உலகத்தில் எப்போதும் தன் கிரணங்களால் பிரகாசித்துக்கொண்டிருக்கும் அக்நிஜ்வாலைக்கு உவமித்தல் பொருந்தும்.

(7) "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்ற பிரகாரம் "எல்லாம் ஒன்றே" யாகையால், அவ்வொன்றாகிய ஈசுவரனின் ஸங்கல்பம் தான், ஒருவனைப்போலவே எல்லோருக்கும் நிஜமான இன்பத்தை விளைக்கக்கூடும். ஆகையால் ஈசுவர சங்கற்பத்தையே அனைவரும் நாடக்கடவர்.

(8) உன் சரீரம் எதையாவது அடைய விரும்பினால், நீ அதை யதார்த்தமாக விரும்புகிறாயா என்பதைக் கவனித்துப்பார். ஏனென்றால் நீ ஈசுவராம்சமான படியால், ஈசுவரன் எதைச் சிந்திக்கிறாரோ, அதைத்தான் நீயும் சிந்திப்பாய்.

(9) மனிதர்கள் நித்ய, அநித்ய வஸ்துக்களின் விவேகம் அடையும்வரை, ஈசுவரன் பக்ஷமுள்ள அணியைச் சேர்ந்தவர்களாகார்.

(10) உன்னுடைய நிஜ ஸ்வரூபம், ஈசுவரனாகிய மஹா தேஜஸ்ஸினின்று வெளித்தோன்றிய ஒருபொறி என்னலாம். அதாவது நீ ஈசுவரனுடைய அம்சம்.

(11) ஸர்வ பராக்ரமசாலியான ஈசன் உனக்குள்ளேயே இருக்கிறார்.

(12) அதனால், உன் இஷ்டம் தீவ்ரமாகமட்டும் இருக்கும் பக்ஷத்தில், உன்னால் செய்து முடிக்கக்கூடாத கார்யம் ஒன்றுமேயில்லை.

(13) "நான் ஒரு மனிதனேயாயினும், மநுஷ்ய ரூபமாயுள்ள ஈசுவரனே யாகையால், இக்காரியம் என்னால்செய்யக்கூடும், இதைக் கட்டாயம் செய்தே தீர்ப்பேன்," என்று உனக்குள்ளேயே சொல்லிக்கொள், அதாவது உறுதிகொள்ளு.

(14) விவேக மில்லாதவனே தன்னைப் பெரியவனாக நினைத்துக் கொள்ளுகிறான். "நான் இதைச் செய்தேன். அப்பெருங் காரியத்தைச் செய்தேன்." என்று எண்ணிக்கொள்ளுகிறான். ஞாநவானோ, அதாவது விவேகமுள்ளவனோ, ஈசுவரன் ஒருவரே பெரியவரென்றும், நற்காரியங்களனைத்தும் அவராலேயே நடை பெறுகின்றன வென்றும் அறிவான்.

(15) நாம் விகாஸமுறைக்கு அநுகூலமாக விருக்கலாம் அல்லது தடங்கலாக விருக்கலாம். ஈசுவர ஆக்ஞையை நிறைவேற்றலாம் அல்லது அவரை யெதிர்க்கலாம்.

(16) "நாம் எவ்விதம் நடந்துகொள்வது ஈசுவர ஸம்மதம்?" என்னும் அறிவே, ஸந்மார்க்க முறையை நாடுபவர் கவனிக்கவேண்டிய முதன்மையான விஷயம்.

(17) ஈசுவரன் விகாஸமுறை என்ற நியதிக் கிரமத்தின்படி நம்மை ஆளுகிறார். ஒருதடவை மனிதன் விகாஸமுறையின் விதியை நிதர்சனமாகத்தெரிந்துகொண்டால், அதை நிறைவேற்றுதற்காகத் தன்னாலானமட்டும் உழைப்பான். அவ்வழியை விட்டும் வில

கான். ஏனெனில் அவ்வழியானது அத்தகைய மஹிமை பொருந்தியது.

(18) மனிதன் எத்தருணம் நேரான ஞானோதயம் பெறுகிருனே, அப்போது ஈசுவரனின் பக்கமே இருந்துகொண்டு, நல்ல காரியங்களைச் செய்தும், தீயகாரியங்களை விலக்கியும், விகாஸமுறைக்கு அநுகூலமாகவும், சுயநலத்துக் கல்லாமலும் உழைக்க ஆரம்பிப்பான்.

(19) ஒருவன் அவ்விதம் ஈசுவரன் பக்ஷமாகநடப்பானுகில், அவன் வெள்ளியம்பலத்தைச்சேர்ந்தவனுகிருன். அவன் ஹிந்து, பௌத்தன், கிறிஸ்தவன், அல்லது மஹம்மதியன் என்பவைகளில் எப்பெயர் பூண்டவனுயிருந்தாலும் என்ன?

(20) ஈசுவரன் பக்ஷமுள்ளவர்கள், அவர்கள் இவ்வுலகில் இருப்பது எந்த பரமார்த்த விஷயத்திற்காக என்றும், அந்நிலைமையில் அவர்களுடையகடமை என்னவென்றும் அறிந்துகொண்டு, அக்கடமையைச் சரிவர நிறைவேற்றவும் முயன்று வருகிருர்கள்.

(21) உனக்குள்ளிருக்கும் ஈசுவரனை, நீ ஆழ்ந்து உள்நோக்கிச் சென்று பார்த்து, ஈசுவரன் வாக்கைக் கேட்கவேண்டும். அதுதான் நிஜமாகவே உன் வாக்கு.

(22) உன் ஸஹோதரனிடத்து குப்தமாயிருக்கும் ஈசுவராம்சத்தைப் பிரகாசப்படுத்தும் வழியைத் தெரிந்துகொள். அவனையே அவ்வீசுவராம்சத்தை எப்படி நன்குணரச் செய்யலாம் என்பதையும், தீர்க்காலோசனைசெய்து தெரிந்துகொள். இவ்விதம், உன் ஸஹோதரனைத் தவறுன வழியினின்று தப்புவிக்கலாம்.

(23) ஈசுவரசைதன்யம் உன்னிடமிருப்பதுபோல், உன் அயலார்களாகிய ஸஹோதரர்களிடமு மிருக்கிறது. அவர்களிடமுள்ள அந்தஈசுவர சைதந்யத்தை மலரச்செய்வதன் மூலமாகவே அவர்களுக் குதவிசெய்து, அவர்களின் நிலைமையை உயர்த்த முயலுவாய்.

(24) மேல் பார்வையில் எவ்வளவு தீயதாகக் காணப்படினும், ஒவ்வொரு ஜீவராசியிலும், வஸ்துவிலும், ஈசுவர னிருத்தலைத் தெரிந்துகொள்ளக் கற்றுக்கொள்.

(25) முக்கியமாக அன்புக்கு விரோதமாக நடைபெறும் தீய காரியங்கள் மூன்று:—(1) வம்புபேசுதல். (2) துன்பம் செய்தல். (3) மித்யாசாரம். ஈசுவரனிடம் பேரன்பு நிறைந்த ஒருவன், தன்னை இவைகள் அணுகவொட்டாமல், இடையறாது பாது காத்துக் கொள்ள வேண்டும்.

(26) வேட்டை விளையாட்டென்று பெயர் வைத்துக் கொண்டு ஈசுவர ஸ்ருஷ்டியாகிய ஜீவஜந்துக்களைக் கொல்லுபவர்களின் கதியும் குரூரக் கொலை செய்பவர்களுடைய கதியும் ஒன்றே.

(27) எங்கும் நிறைந்துள்ள ஈசன்மேல் அன்புள்ளவனாய், சமயம் வாய்க்கும் போதெல்லாம், ஜீவகாருண்யத்தின் சிலாக்யத்தையும், ஜீவஹிம்ஸையின் இழிவையும் தைர்யமாய் எடுத்துரைக்க வேண்டும்.

(28) கொடிய மித்யாசாரத்திற்குட் பட்டு, அன்பின் வடிவமான ஈசுவரன் பெயரை வைத்தே அநேக பாதகங்களைப் பலர் அறியாமையாற் செய்கிறார்கள். ஆகையால் நீ மிகவும் ஜாக்ரதையாயிரு. அதின் அற்ப சின்னங்கள் கூட உன்னிடத்தில் இருக்கவேண்டாம்.

(29) ஸத், சித், ஆனந்தம் என்பவை ஸர்வேசுவரனின் மூன்று அம்சங்கள்.

(30) ஈசுவரனுக்குத் தொண்டுபுரிய வேண்டு மென்று நீ இச்சிப்பாயானால், மேற்கூறிய அம்சங்களை அடைதற்கேதுவான கர்மம் பக்தி, ஞானம் என்ற மும்மார்க்கங்களையும் இவ்வுலகில் கடைப் பிடித்தல் வேண்டும்.

(31) அன்பே ஈசுவரன் என்ற பிரகாரம், ஞானத்தின் உருவே ஈசுவரன் என்பதும் உண்மையே. ஆகையால் எவ்வளவுக் கெவ்வளவு நீ ஞானவானாகிறாயோ, அவ்வளவுக்கவ்வளவு ஈசுவர ஸாந்நித்யம் உன்னிடத்தில் விளங்கும்.

## பிப்ரவரி மாசம்.

மாஸாந்தர அப்யாஸம்:—குருநாதனுடைய பரிசுத்த ஸந்நிதியில், குருநாதனைப் போலாக வேண்டு மென்ற இச்சை தவிர, மற்ற ஆசைகளெல்லாம் நாசமடைகின்றன.

## வார அப்யாஸம்.

1-வது வாரம்:—குருநாதன் எவைகளைச் செய்வார், பேசுவார், நினைப்பார் என்று நீ எண்ணுகிறாயோ, அவைகளை நீ செய்யவும், பேசவும், நினைக்கவும் வேண்டும். மற்றவைகள் விலக்கப்பட வேண்டியவைகள்.

2-வது வாரம்:—குருநாதன், அவரது சக்தியைத் தம் சிஷ்யன் மூலமாகவே மற்றவர்களுக்கனுப்பும்படியான சந்தர்ப்பங்கள் அடிக்கடி நேரும். சிஷ்யன் மநத்தளர்ச்சிக்கு இடங்கொடுப்பானாகில் குருநாதன் அவ்விதம் செய்ய முடியாது. ஆகையால் எப்போதும் ஸந்தோஷமுள்ளவனா யிருத்தல் வேண்டும்.

3-வது வாரம்:—நீ உன் குருநாதனைத் தியானித்து நன்குணர்ந்தும், அவரை நிச்சய புத்தியுடன் நம்பவும் வேண்டும். ஏனெனில் இவ்விதம் முடியாவிட்டால், அவர் உனக்கு ஸஹாயம் செய்யவும் முடியாது. பூர்ண நம்பிக்கை ஏற்படாத வரையில் அவருடைய அன்பும் சக்தியும் உன்னிடம் வரா.

4-வது வாரம்:—நீ செய்யும் வேலை யொன்றை, குருநாதன் உன்முன் தோன்றிப் பரீக்ஷிப்பாராயின் எவ்வளவு ஜாக்ரதையாய்ச் செய்வாயென்று நினைத்து, அவ்விதமே எல்லா வேலைகளையும் திருந்தச் செய்ய வேண்டும்.

எக்கருமத்தையும், அவர் நிமித்தமாக நீ செய்யவேண்டும்.

## தினசரி அப்யாஸம்.

(1) குருநாதன் எவைகளைச் செய்வார் பேசுவார் நினைப்பார் என்று நீ எண்ணுகிறாயோ, அவைகளை நீ செய்யவும், பேசவும், நினைக்கவும் வேண்டும். மற்றவைகள் விலக்கப்படவேண்டியவைகள்.

